ஸ்ரீ

# திருப்பதி
# வெங்கடேசப் பெருமாள்
# நாடகம்



சூளை - முனிசாமி முதலியார் பாரியாள்

**அம்மணி அம்மாளிடம்**

சர்வ சுதந்திரம் பெற்று


**B. இரத்தின நாயகர் ஸன்ஸ்**

அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது.

சென்னை—1.


 —— [ரூபா. 1—00.

ஸ்ரீ

ஸ்ரீ ராமஜெயம்

திருப்பதி

# வெங்கடேசப் பெருமாள் நாடகம்

## விநாயகர் துதி

ஓமென்றும்பொருளேபோற்றி உமையவள்மகளேபோற்றி
காமனையெரித்தயீசன் மைந்தனேபோற்றிபோற்றி
வாமனரூபமானவைகுந்த வாசன்மேல்பாட
தாமதமில்லாக்கணபதி சபைதனில்வருகின்றாரே.

## விநாயகர் வருகிற தரு

வல்லபைகணபதி வந்தார்
சிவன்மைந்தன் வல்லபை
வல்லபைக்கணபதி வாழ்ந்திடுங்குணபதி

ஆனைமுகமிலங்க அழகுபுஜந்துலங்க
சேனைதளங்கள்சூழ திருவடிபாதந்துலங்க வல்

தண்டையும்கடகமாட தாளமத்தளம்போட
அண்டையில்மாதராட அழகாய்வெண்சாமரைபோட வல்

வேலருக்குமூத்தோன் வீதியில்நின்றுகாத்தோன்
பாலும்பழமுமுண்போன் பாதையில்வந்தமர்ந்தோன் வல்

## சரஸ்வதி துதி விருத்தம்

ஹரிஓம்நன்ருகவென்று அன்னைசரஸ்வதியேபோற்றி
குருவாழ்ககுருவேதுணையென்று குறித்துவுன்மலர்த்தாள்
வரும்வழிதன்னைப்பார்த்து வாடியேபாலர்நாங்கள் [போற்றி
திருவடிதன்னைக்காண சிந்தித்துபோற்றினோமே.

## மகாவிஷ்ணு துதி தரு

வாரும்ஹரிகரியே வைகுந்தத்துக்கதிபதியே
காரும்ஹரிகரி வைகுந்தமேகதி
சீரும்பெருகிடக் காரும்முரகரி வா

ஹரியேதிருமாலே ஆதரியும்பெருமானே
பெருமையுன்கீர்த்தியை புகழ்ந்துதோத்தரித்திட வா

சங்குசக்ரபாணி சரித்திரமேம்பூணி
எங்களைக்கார்த்திட இவ்வேளைவரவேணும் வா

சிங்காரமாய்நீரும் தேவன்கருடனேறி
பங்கயக்கண்ணனே பாலனைக்கார்த்திட வா

திருப்பதிநகர்தன்னில் தேவன்திருக்கூத்தை
பொருப்புடனேபாட புண்ணியனேவாரும் வா

வைகுந்தவாசரே மன!
செய்யும்நாடகத்திற்கு நிந்தையொன்றணுகாமல் வா

ஆழ்கடலுலகெங்கும் அமர்ந்தபெருமாளே
அடியேன்செய்பிழையெல்லாம் அபசாரம்பொறுத்துமே வா

பலராமர் க‹

பாரியமுடிகளுமே பளபளென்ன
அணிந்தபட்டாடையுமே தகதகென்ன
பாதமதில்தண்டையது கலகலென்ன
பலவரிசைதன்னுடனே செங்கோலேந்தி.

கிருஷ்ணமூர்த்தி கவி

சீரியேதானெழுந்து கிருஷ்ணமூர்த்தி
சிந்தையில்பலபணிகள் சீராய்பூண்டு
கூறியதோர்மாதுவின் தசையா தந்து
குணமுடனேதிருநடனம் புரிந்துநிற்க

பலராமர் கவி

சரியாய்விசாரணை புரிந்திட
சகலரும்வந்துகை கட்டிநிற்க
சப்தசாகரமு மகிழ்ந்துமேவிழுந்ததாய்
சகலஅந்தணர்வேத கோஷ்டங்கள்பாட

கிருஷ்ணமூர்த்தி கவி

பேரிகைமுரசுடங்கா மல்லரிதுத்தரி
வீரசின்னங்க ளூதிவரவே
பிடிபடாவாத்தியங் கடலொளிபோலவே
பிரசண்டகோதண்ட உத்தண்டனெழுந்தார்

பலராமர் கவி

பாராளவெண்ணியே பலராமரோடி

கிருஷ்ணமூர்த்தி கவி

சீராணகிருஷ்ணரும் சிந்தையாய்நாடி

பலராமர் கவி

தாராளமாகவே சபைதனைத்தேடி




பலராமரும் கிருஷ்ணமூர்த்தியும் வருகிற தரு

பலராமர் அரிகிருஷ்ணரும் பலபணி அலங்கரித்து
கலகலென்று தண்டையாடவே கனகசபை வாரார் பல

அண்ணன் தம்பியிருவர்கூடி அரசுசெங்கோல்தான்புரிய
மன்னர்மன்னர்வந்துசூழ மாளிகைவிட்டுவாரார்பாரீர் பல

கெருடக்கொடிபறக்க கெந்திருவர்முன்னடக்க
திருடனை கிருஷ்ணன்கூடி சீர்சபைக்குவாரார்பாரீர் பல

வீரகர்ணன்சிசுபாலன் வெற்றியுள்ளசாம்புவந்தன்
தாரையுடன்பூரிபாட சகலரும்வந்தனரே பல

தேச விசாரணை

பல. பிரமாலயவிஷ்ணுவாலயம் சிவாலயம்
மூன்றுகாலமும்பூசை செவ்வையாய்நடந்துவருகுதா

கிரு. சொற்படியேஉமது கடாட்சத்தால்தேர்திருவிழா
தினந்தினம்நடந்துவருகின்றது அண்ணா

பல. அந்தமாவேதியர் அவரவர்கள்சேமதிட்டை
அனுதினம் செய்கின்றனரா

கிரு. உந்தனிடமொழிப்படிக்கு அவரவர்
உண்மையாய்நடக்குரார் அண்ணா

பல. இன்பமாய்நமது தேசத்திலுள்ளகுடிகள்
இடுக்கமில்லாமல் வாழ்கின்றாராதம்பி

கிரு. துன்பமில்லாமலே அவரவர்நமதுகிருபையால்
சுகமாகவாழ்கின்றார் அண்ணா

பல. நீதியின்படியேநமது ராச்சியமெல்லாம்
நிகரில்லாமல்இருக்கிறாரா தம்பி

பலராமர் சொல் வசனம்

கேளுந் தம்பி! நமது ராஜ்ஜியம் சுபீட்சமா யிருக்கின்ற படியால் அதிக சந்தோஷ மடைந்தேன்; நம்மைப்போ லொத்த ராஜர்கள் ஆளப்பட்ட சீமைகளெல்லாம் அவரு டைய க்ஷேமங்களை அறியவேண்டி யிருப்பதால் நாமிருவரும் இன்று ராத்திரியில் சென்று அந்தந்த தேசங்களைப் பார்த்து வருவோம் வாரும் தம்பி கிருஷ்ணமூர்த்தியே.

பலராமர் சொல் தரு

தேசங்கள்பார்க்கவே ஆசையாயிருக்குது
சீராய்நடந்துவாரும் தம்பி

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

கூசமில்லாமலே ஆசையாயிருக்குது
கூடநடந்துவாரும் அண்ணா

பலராமர் சொல் தரு

ஆசையுடனேவந்து அழகுள்ளதேசமிது
ஆறுதல்சொல்லும்என் தம்பி

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

வாசங்கள்செய்திடும் வாதாபி என்தாபி
வாழ்ந்திடும்தேசமிது அண்ணா

பலராமர் சொல் தரு

அச்சமில்லாமல் வாழும்சீமையது
அதையெனக்குரையும் என்தம்பி

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

கொச்சிதேசமிது குடகுதேசம்பாரும்
குறிப்பாகக்கண்டிடும் என்னண்ணா

பலராமர் சொல் தரு

வச:
மன்னவனார்சொல்லும் என்தம்பி

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

மச்சதேசமாளும் மன்னன்விராடபூபன்
மாளிகையிதோபாரும் என்னண்ணு

பலராமர் சொல் தரு

சற்றுமஞ்சாமலே சிந்தைமகிழ்ந்திடும்
தேசமெதுசொல்லும் என்தம்பி

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

ஒற்றுமையாகவே வாழ்ந்திடும்ஐவர்கள்
உபலாவியப்பட்டணம் என்னண்ணு

பலராமர் சொல் தரு

தாண்டியேவந்தோமே சதுரானதேசமெல்லாம்
தனிதேசமாகுது என்தம்பி

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

தூண்டியேகோபத்தால் துடிக்கஉயிர்வாங்கும்
பாண்டியதேசமிது என்னண்ணு

பலராமர் சொல் தரு

ஏழைகளெல்லாம் தாழ்வில்லாமல்வாழும்
எத்தேசமிது என்தம்பி

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

சோழதேசராசர் ஆண்டபூமியிது
சொல்லிவந்தேன்பாரும் என்னண்ணு

பலராமர் சொல் தரு

பொருந்தியகாற்றினல் வாடைகள்வீசும்
இருந்துபோகலாம் என்தம்பி

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

திருவந்திமலைமீதில் பொருந்தியேயிருக்கலாம்
சீராய்நடந்துவாரும் என்னண்ணு

பொது வசனம்

இந்தப் பிரகாரமாக கிருஷ்ணமூர்த்தியானவரும் பல ராமரும் திருவந்திமலைமீதிருந்து இளைப்பாறி யிருக்கின்ற போது பலராமர் கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து சொல்லு கிற விதங்காண்க.

பலராமர் சொல் விருத்தம்

தம்பியேசொல்லக்கேளாய் சனிவாரம்பிறந்துபோச்சு
கும்பலாயிருவர்கூடி குணமுடன்யெண்ணெயிட்டு

சம்பிரமமாய்ஸ்நானஞ்செய்ய சலமதுகிடைக்கக்காணும்
தென்புள்ளகெருடன்தன்னை சீக்கிரம்வரச்செய்வாயே.

வசனம்

வாரும் தம்பி இன்றிராத்திரி பதினைந்து நாழிகை ஆய் விட்டபடியால் சனிவாரம் பிறந்துவிட்டது. நாமிருவரும் எண்ணெயிட்டு ஸ்நானஞ் செய்யவேண்டி யிருப்பதால், இவ் விடத்தில் ஜலம் கிடைக்காதபடியால் உனது வாகனமாகிய கெருடனை யழைப்பியும் தம்பி கிருஷ்ணமூர்த்தி.

கருடன் சொல் விருத்தம்

இந்தமொழிதன்னைக்கேட்டு எழுந்துமேகருடன்தானும்
அந்தமாயலங்கரித்து ஆடைகள்பரிமளிக்க
எந்தனையழைத்தசேதி யென்னமோவறியேனென்று
நந்தகோபாலர்முன்னே நாடியேவருகின்றாரே.



கெருடபகவான் வருகிற தரு

சித்திரப்பதுமை போலே
திரேகம் பளபளென்ன

செங்கருடனும்நானே ஸ்ரீகிருஷ்ணதேவர்
ஏறும்வாகனம் நானே

வைத்திழைத்தப் பணிகொஞ்ச
வானவர்தேவர்களஞ்ச வாடைபரிமளிக்க சித்

சிந்தைமனங்களித்து திரேகம்பரிமளித்து
தேடியேவந்தேனே ஹரிபாதத்தை நாடிவந்தேன் சித்

நந்தகோபாலர்நம்மை நாடிஅழைத்ததென்ன
நாடிஅவர்பாதமதை தேடிஅறிவோமென்று சித்

மூத்துப்பதக்கமின்ன முடியும்பளபளென்ன
மோகனப்பணிகள் துன்னவே வேடிக்கையாக சித்
எத்திசையும்நடுங்க எமகிரியுமொடுங்க
சுற்றிலும்மாதர்களாட சொகுசாய்தாளங்கள்போட சித்
எங்கும்பிரகாசிக்க யெனுமதிசயிக்க
எழுந்துயிதோவந்தாரே கெருடதேவன் சித்
அங்கமதில்திருநாமம் பொங்கமுடன்துலங்க
மங்களமாயிருவர் மாயன்சபையைத்தேடி சித்

கெருடபகவான் சொல் ஜம்பை

சங்குசக்கரம்யேந்துங்கையா சாரங்கபாணியே
எங்கும்நிறைந்தமாலே மேகவண்ணுசரணம்
சங்கதியையெந்தனுக்கு சாற்றுவீர்தேவா
மங்கைலட்சுமியே மாயகிருஷ்ணதேவரே
எங்கும்நிறைந்தமாலே மேகவண்ணுசரணம்
உந்தன்திருப்பாதத்தை உண்மையாய்தொழுதுநின்றேன்
இந்தமலைமீதில்நீங்கள் இருவருமாய்வந்ததென்ன
எந்தனுக்குவிபரமாக வந்ததையுரைப்பீர்

கெருடபகவான் சொல் வசனம்

சரணம் சரணம் கர்த்தனே! இந்த மலைமீதில் என்னை ஏது காரணமாக அழைப்பித்தீர்; அதை இன்னதென்று திருவுளம்பற்றி யருள்செய்ய வேண்டுமையா சுவாமி.

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

வாரும்ப்பா கெருடா! இன்றையதினம் சனிவாரம் பிறந்தபடியால் நாம் ஸ்நானஞ் செய்யவேண்டி யிருப்பதால் ஜலம்கொண்டு வாருமப்பா கெருடனே.

கெருடன் சொல் தரு

அடிக்குள்ள அண்டமெல்லாம் நொடிக்குள்ளறிவேனென்று
யதிரவேதானடந்தான்கெருடதேவன் யதிரவேதானடந்தான்
திடுக்கிடதேவரெல்லாம் முடுக்குடனேயெழுந்து
சீரியேதானடந்தான்கெருடதேவன் சீரியேதானடந்தான்
எத்திசைரிஷிமுனிவர் தத்தியேபரந்தோடிட
எதிராகதானடந்தானேகருடதேவன் எதிராகதானடந்தானே
காசிநதித்தன்னைக்கண்டு கனத்தமகிழ்ச்சிகொண்டு
காலனைப்போல்வந்துநின்றார் கெருடதேவன்கால
கோரமானமூக்கைநீட்டி ஆகுபோலத்தான்கிழித்து
குண்ணருகில்வந்துவிழுந்தான் கெருடதேவன் குண்

பொது வசனம்

இந்தப்பிரகாரமாகக் கெருடபகவான் காசிநதியைக் கண்டு மூக்கினால் கிழித்து சுவாமி யிராநின்ற மலையருகில் மூர்ச்சையாய் விழுந்துயிருக்க அந்த சமயத்தில் கெருடன் போனவனைக் காணோமென்று பலராமர் கோபித்துச்சொல் லுகிற விதங்காண்க.

பலராமர் சொல் கவி

அப்பனேதம்பிகேளாய் அனுப்பினோம் அவனைக்காணோம்
சர்ப்பமாயிருக்கும்ஆதி சேஷனைவரச்செய்வாயே.

வசனம்

கேளும் தம்பி ஜலங்கொண்டு வரப்போன கெருடன் இன்னம் வரக்காணோம், நாம் வந்து வெகுநேரமாய்விட்டது நாகேந்திரனா யிருக்கப்பட்ட ஆதிசேஷனை வரச்செய்யுந் தம்பி.

கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

செப்பியபடிக்குயானும் சிந்தையில்துயரங்கொண்டு
தப்பிதம்வராமுன்னே சடுக்கெனவரச்செய்வேனே.

வசனம்

கேளும் எனது அண்ணாவே! உன் மனதின்படியே ஆதி சேஷனை அழைப்பிக்கிறேன், அண்ணாவே.

ஆதிசேஷன் சொல் விருத்தம்

எத்திசைநடுங்க எமகிரிதத்தளிக்க
கத்தியும்பிண்டிபாலா கைதனில்பிடித்துக்கொண்டு
சுற்றியேநாகசேனை சூழ்ந்துகொண்டாடயென்னை
சத்தமுங்கலகலென்ன ஆதிசேஷனும்வருகின்றானே.

ஆதிசேஷன் சொல் தரு

வந்தானே ஆதிசேஷன் பாரீர்நல்ல
வாகனகெருடனேறும் அரியினிடசேஷன் வந்

இந்திராதிதேவர்களும் வாடநல்ல
இமையானபட்டாடை பணிகளுமேயாட
சுற்றிலும் மாதர்களாட
சொகுசுடனேதாள மத்தளங்களும்போட
கட்டாரிசிலைவாளு மேந்த நல்ல
கண்டவர்திடுக்கிட்டு ஓட அந்த
எண்டிசைப்புவனமும் வந்துமேதுதிக்க
செந்தாமரைக்கண்ணன் பாதம்தேட
தேடியேதுருசாகவே யோடிகாடினான் வந்

ஆதிசேஷன் தரு

சுவாமியேநீங்களிந்த மலேமீதிலேஐயா
தனியாகவந்ததென்ன அதையுரைப்பீர்மெய்யா
இஷ்டம்வைத்துஎன்னை ஹரிகேசவா
அழையுமுன்னமேஎந்தனுக்கு உள்ளமுமகிழுவே
கள்ளமில்லாமலே சொல்வது சுவா

பலராமர் சொல் தரு

சொல்வதுமென்ன ஆதிசேஷா நீர்கேளும்
துரிதமாய்கானகம் சென்றுநீயும்
அல்லலடைந்திடாமல் நல்லஜலங்கொண்டுமே
அரைநிமிஷத்தில்வாரும் ஆதிசேஷா சொ

ஆதிசேஷன் சொல் தரு

ஐயாநான்சரணம் மய்யாவுன்திருவடிக்கு
அறிந்துநான்வாரேனையா ஹரிகேசவா
வையகந்தனிலே வழிபார்த்துநானும்
வகையறிந்துவாரேனையா ஹரிகேசவா

சுருள். மன்னவன்கெருடன் வந்திடுமுன்னே
இன்னகர்தனிலே சொன்னதுபோல்வாரேன் ஐ

பலராமர் சொல் தரு

சித்தங்கலங்காமலே தேடியும்பார்த்து
உற்றதைஎந்தனுக்கு உரைப்பாய்ஆதிசேஷா
சித்தங்களிக்கவே தேடிநதிகள்சென்று
தீர்த்தங்கொண்டுவருவாய் ஆதிசேஷா

சுருள். தேவகபோதா ஆக்கினைதூதா
ஜாக்கிரதையுடனே சீக்கிரமாக சித்

பலராமர் சொல் வசனம்

கேளும் ஆதிசேஷா! நீ அதிவேகமாகச் சென்று ஜலங் கொண்டு வாருமப்பா ஆதிசேஷனே.

ஆதிசேஷன் சொல் தரு நொண்டிச்சிந்து

சண்டப்ரசண்டமுடனே ஆதிசேஷனு மெழுந்து வெகு ரோஷத்துடனே மண்டியிட்டு சினமேறி மீசை படபடவென் றுமேயாடி படமதை, தான்விரித்து பூமியில் பாய்ந்துமே யோரடியாய் தானடிக்க இடமதுதான்கொடுத்து பூமிதேவியு மோடியே பதுங்கினளே முடுக்குடன் தானெழுந்து களிப் புடனே முன்னமே வந்து நின்றான் தன்னுடனே,

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக ஆதிசேஷன் மலையைக் குடைந்து ஜலங்கொண்டு வந்துவிட அந்தச்சமயத்தில் கெருடபகவான் மூர்ச்சைதெளிந்து கிருஷ்ணமூர்த்தியை நினைத்து துதிசெய்கிற விதங்காண்க.

கருடபகவான் சொல் தரு ஜம்பை

ஆசையாகசென்றுநானும் அலைந்துழண்றேனே ஹரிஹரி
அலைந்துழன்றேனே
காசிநதிதன்னைக்கண்டு களிப்படைந்தேனே
மோசம்வராமுன்னம்நானும் மூக்கினால்கிழித்துஹரிஹரி
முன்னேகொண்டுவரநானும் முயற்சிகொண்டேனே
பச்சைநிறமேனியனே பலர்க்குமெய்யனேஹரிஹரி
இச்சைவையும் எந்தன்மீதில் எழுந்துவரவும்
நாராயணாஅரிகோவிந்தா னந்தகோபாலாஹரிஹரி
சீராயெந்தன்மீதில் சிந்தையில்லையோ

கெருடபகவான் சொல் வசனம்

ஹரி ஹரி ஸ்ரீமந்நாராயணா உமது கிருபையால் காசிநதியைக்கண்டு மூக்கினால் கிழித்து இந்த மலையருகில் வந்து விழுந்தேன் இந்தவேளை களைதெளியும்படி கண்பாருமையனே.

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக கெருடபகவான் காசிநதியைக் கண்டு மூக்கினால் கிழித்து இந்த மலையருகில் சுவாமி முன்பாக கொண்டுபோக வேண்டுமென்று எண்ணங்கொண்டு வருகையில் சுவாமியிருக்கும் மலைக்குப்பின்னால் வந்துவிழுந்து களையினால் தோத்தரிக்க கிருஷ்ணபகவான் ஞானதிருஷ்டியினாலறிந்து ஞானமந்திரத்தை யுச்சரிக்க அப்போது கெருடனெழுந்திருந்து சொல்லுகிற விதங்காண்க.

கெருடன் சொல் விருத்தம்

திடுக்கிடதேவரெல்லாம் கிருஷ்ணன்மனங்களிக்க
அடுக்குள்ள் அண்டமெல்லாம் அலறிவிழுந்தாப்போல
சடுக்கெனயெடுத்தானப்போ ஜலங்கொண்டுபோக
முடுக்குடனேயெழுந்திருந்து சுவாமிமுன்பாக.

கெருடன் சொல் தரு

துடுக்குடன்தானெழுந்து கிறுகிறென்று
சுவாமியிடந்தன்னருகில் வந்துநின்றதாம்
கடுகடுத்துமுகம்வாடாதே யென்றுசொல்லி
கண்டுகொள்வாயிது காசிநதியென்று

பொது வசனம்

இவ்விதமாக கெருடன் காசிதீர்த்தங் கொண்டுவர அந்த சமயத்தில் ஆதிசேஷன் மலையைத்துளைத்து ஜலங் கொண்டிருப்பதை கெருடபகவான் கடூரமாகிய கோபமாய் வருகிறதைக் கண்டு கிருஷ்ணமூர்த்தி கையைக்காட்டி கோபத்தைத் தணிக்க அச்சமயத்தில் ஆதிசேஷன் கோபமாக கெருடபகவானைப் பார்த்து சொல்லுகிறவிதங் காண்க.

ஆதிசேஷனுக்கும் கெருடனுக்கும் தர்க்கம்

ஆதிசேஷன் சொல் கவி

செஞ்சிலம்புகையுங்காலுஞ் செங்கருடாநீயுங்கேளாய்
சஞ்சலம்வந்ததென்ன ஜலங்கொண்டுவரயின்னேரம்.

வசனம்

அகோவாரும் கெருடனே! எனக்குமுன்னே ஜலங் கொண்டு வருவதாகப்போனாய், நானுனக்குப் பின்னால்வந்து மலையைத் துளைத்து ஜலங்கொண்டு வந்தேன் இன்னேரம் என்ன செய்தாயடா கெருடனே.

கெருடன் சொல் கவி

அஞ்சியேசொல்வேனிப்போ அறிவுகெட்டவனேகேளாய்
மிஞ்சியகோபத்தாலே மீட்டியால்வாட்டுவேனே.

வசனம். அடாவாடா நாகேந்திரா! நீ என்ன சமர்த்தனாகப் பேசவந்தாய் உன் கெர்வத்தை அடக்குகிறேன் பாரடா ஆதிசேஷா.

ஆதிசேஷன் சொல் தரு

கெருடனேவாடாஉனக்கென்ன கெம்பீரமோடா
திருடனைப்போல்வந்து திகைத்துநீபேசுகிறாய்
தீரமாகவந்தேன் மாரியடிக்கவுன்னை கெரு

கெருடன் சொல் தரு

சேஷனேவாடா வெகு ரோஷனேபோடா
தாழுவேஉன்முது தரிபட்டுஓடுமே
வாழ்வைப்பறிக்கவே வந்தேனிப்போது சே

ஆதிசேஷன் சொல் தரு

அறிவேண்டாவாடா உந்தன் ஆண்மைகள்போடா
தெரியுதேயிப்போது தீரத்தின் ஆண்மைகள்
மரியாதையோஉனக்கு மடையனேநீபோடா அறி

### கெருடன் சொல் தரு

சோம்பேரிமூடாபோடா சேராமல்யெதிராகவாடா
பாம்பாகபிறந்தவன் வீம்பாகபேசுகிறாய்
காம்புத்தடியாலே சதைக்கவதைக்குறேன் சோ

### ஆதிசேஷன் சொல் தரு

வல்லமைபேசவந்த வார்த்தைநானறிவேன்
வாட்டியேயடிப்பேன் வீரங்காட்டியேமடிப்பேன்
போட்டிகள்காட்டிநீ மூட்டினாய்சண்டையை
வாட்டியேயடிக்கிறேன் வல்லமைபாரடா வல்

### கெருடன் சொல் தரு

வல்லமைகூறிவந்த ஆதிசேஷனேஉன்னை
வாட்டியேபாணத்தை பூட்டியடிக்குறேன்பார் வல்

### ஆதிசேஷன் சொல் தரு

நில்லுமென்றுவந்துகுத்தினேன் நானுந்தன்மீதில்
வல்லமைகட்டெரிய வாதுகள்செய்தேன் நில்

### கெருடன் சொல் தரு

சொல்லும்வாயைமூடுமுன்னே துடுக்காயுந்தனுக்கறுக்க
சூக்ஷுமமாகபாணம் சுருக்காகவிடுத்தேன் சொ

### ஆதிசேஷன் சொல் தரு

பாருமென்றபோதேயிப்போ பதைபதைக்கஉங்கனுடலும்
தருமமாகயுந்தனை நான்சாகக்கொல்வேன்பாருமென்றான் ()

### கெருடன் சொல் தரு

என்னிடவலுமைபார்க்க யேகிடவுன்னாலாகுமோ
மன்னவர்கிருஷ்ணதேவர் மனதினில்மகிழ்ந்திருக்க என்

### ஆதிசேஷன் சொல் தரு

மாட்டியேயடித்தேன் வீரங்காட்டியேமடித்தேன்
கோட்டிபோட்டிகாட்டி காட்டினேன்திட்டி
கூட்டியேயுந்தனை வாட்டிடசெய்குவேன் மாட்

### கெருடன் சொல் தரு

ஏகவேயடிப்பேன் இருவர்மனமும் நோகவேயடிப்பேன்
போகவேஉயிரது பிடிக்கநமனிடம்வந்திட
சோகவேகாலனும் கொடிதனில்பிடித்திட ஏக

இவ்விதமாக ஒருவர்க்கொருவர் சண்டைசெய்திருக்கும் போது கெருடனானவன் கிருஷ்ணமூர்த்தி யிருக்கும்போது எனக்கு என்ன பயமென்று சொல்ல, அந்தச் சமயத்தில் கிருஷ்ணமூர்த்தியானவர் அதிககோபத்துடன் சொல்லுகிற விதங் காண்க.

கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

அடிக்கடிசபதங்கூறி அஞ்சாமலடிப்பேனென்றாய்
துடுக்குடன்கோபமாகி துள்ளியேவருகின்றாரே.

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

சக்கரம்கையிலெடுப்பேன் அவன்தலையை
அரிந்துநானும் விடுப்பேன்
பக்குவமறியாமல் பதறியேபேசினான்
பாவியேயிவனுயிரை ஆவிபதரச்செய்வேன் சக்

பலராமர் சொல் தரு

பதராதேதம்பியேகேளு பாலன்சொன்னசொல்லை
மனம்பொருத் தாளும்
சிதரவேசெய்வது சிறப்பதுநமக்காமோ
சீராகயெந்தன்முகம் பாராமல்நீயிப்போது பத

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

பொல்லாதவார்த்தைகள்பேசினான் ஆதிசேஷன்
போமென்றுதடுக்காதே யேதென்னண்ணை
எல்லாம்தெரிந்து எனக்கெடுத்துரைக்கிறீர்
நில்லாதேஎன்முன்னே பொல்லாதகோபம்வரும் பொ

பலராமர் சொல் தரு

இருவரையொன்றாய் பாரும்
இனிவரும்பிழைகளை நீயுமேகூறும்
பெருமையறியாமலே பேசிவிட்டானே
அருமையாய்நம்மிடம் அடிமைபடலாச்சே இரு

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

அப்படியவன்சொல்லலாச்சு நமக்கு
அடிமையானபின் இனியென்னபேச்சு
எப்படிசொல்லுவான் எண்ணிபாராமலே
அப்பவேயவனையும் அதம்செய்துபோடுவோம் அப்

பலராமர் சொல் தரு

நம்மையேநம்பிவிட்டான் அவன்
நடத்தையறியாமலே கெடுத்துவிட்டான்
கும்பலாயிருந்து கூடிஞல்லாபமுண்டு
தம்பிநிதானித்து தயவாய்பொருத்திடு நம்

கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

அண்ணஞர்மொழியைக்கேட்டு அடங்கியேகிருஷ்ணதேவர்
குண்ணியேமனதுவாடி கோபத்தைத்தான்தணித்து
பண்ணியதவத்தால்கெருடன் பறந்திடநிழல்பட்டாலே
மண்ணினில்வீழ்ந்துசேஷன் மரணமுமடைகுவானே.

வசனம்

கேளும் கெருடனே! உன்னை அவமானஞ்செய்த ஆதி சேஷனுக்கு சாபங்கொடுத்தேன்; அது என்னவென்ருல், நீ ஆகாயத்தில் பறக்கிறபோது உன்னுடைய நிழல்பட்டவுடன் இறந்துபோவான் உன் மனதின்படி பறந்துகொள்ளும்.

பொது வசனம்

கிருஷ்ணமூர்த்தியானவர் இவ்விதமாக கெருடனுக்குச் சொல்லியிருக்கும்போது அந்தசமயத்தில் பலராமர் எண்ணை யிட்டு நீராடவேண்டுமென்று யோசித்து அரைப்புகொண்டு வருவார் யாரென்று மனதில் கிலேசமாகவெண்ணி தம்பி யைப் பார்த்து சொல்லுகிறவிதங் காண்க.

பலராமர் வசனம்

வாரும் எனது தம்பி! எண்ணெயிட்டு நீராடவேண்டும். ஆனதால் கானகம் சென்று அரைப்புக்கொண்டு வாரும் தம்பி கிருஷ்ணமூர்த்தியே.

கிருஷ்ணமூர்த்தி சொல் கந்தார்த்தம்

என்னைநீயாளுமாக யெண்ணியேசொன்னதாலே
பன்னியகோபத்தோடு பார்த்துமேயுருகிநெஞ்சம்
உன்னிடமுகத்தில்நானும் ஒருநாளுமுழிக்கேனென்று
சொன்னதோர் மொழியைககண்டு.

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

துடுக்குடன் தானெழுந்து கிருஷ்ணதேவர்
தூக்கியேமலைமேல்கல்லை வைத்திடவே
அடுக்குகள் மலைகளெல்லாம் கலங்கிட
சாய்ந்திட

திடுக்கென தான்வாங்கி சாத்திட
திருப்பதிமலேமேல் வைத்திட
மூடுக்குடன் தானெழுந்து தேவர்களெல்லாம்
முன்னேயோடிவந்து தன்னருகேநிற்க துடு

பொது வசனம்

கிருஷ்ணமூர்த்தி அண்ணன்பேரில் கோபித்து அண்ட ரெண்டங்கள் தத்தளிக்க ஓர் காலே தூக்கி நகரி மலேமேல் வைத்து அந்தமலே சரிந்து ஓடக்கண்டு காலேவாங்கி திருப்பதி மலேமேல் வைத்தும் நாம் இருப்பதற்கு நல்ல இடம் இதுவே சரியென்று திருப்பதி நாமதேயமிட்டு இருக்கிறபோது அந்த சமயத்தில் கெருடபகவான் ஆதிசேஷன்பேரில் கோபமாகி சொல்லுகிற விதங்காண்க.

கெருடபகவான் சொல் தரு சாமா

அண்டரண்டங்கிடுகிடென்ன அதிரப்பறக்கிருன்கெருடன்
அதிரப்பறக்கிருன்
ஆதிசேஷனெங்கேயென்று வருகிருன்
அவனதட்டிவருகிருன்
மண்டலத்துதேவரெல்லா மதித்துவாடவே
என்னேதுதித்து ஓடவே
மடையனெங்கே போனுனென்று
மரித்துத்தேடியே அவனே.
குறித்துத்தேடியே
என்னேக்கண்டுஏளிதமாக யெண்ணிப்பேசினன்
மனம்குன்ண வீசினன்
எங்கேபோனு னென்றுசொல்லி
பேசிவருகிருன் கையை
வீசிவருகிருன்
எந்தயிடத்திலிருந்தாலுமவனே ஏகிப்பிடிப்பேனே
மனம்தேங்க அடிப்பேனே
என்னிடநிழல் பட்டவுடனே
எரிந்துபோவான் மனம்

ஆதிசேஷன் சொல் தரு

இந்தமோடிசெய்யலாகுமோ கோபாலகிருஷ்ணு
எந்தன்மனமறிந்து யிஷ்டந்தனேதெரிந்து
மந்திகெருடனுக்கு வரமதுகொடுத்தாயே இந்

என்னபுத்திநினேத்தாயடா கோபாலகிருஷ்ணு
எப்படிச்செய்ய மனந்துணிந்தாயோ
அன்னேதந்தைநீஎனக்கு அடிமையேநானுனக்கு
ஆண்டியிருந்தவனே இரண்டகஞ்செய்திடலாமோ இந்

பாருலகில்லென்னைக்கண்டால் கோபாலகிருஷ்ணு
பயந்துநடுங்கியே யோடுவார்
பெரும்கீர்த்தியெல்லாம் பெருமையழிந்துபோச்சே
காருபலராமாளென்னை கர்த்தனே உனக்கபயம் இந்

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக ஆதிசேஷன் பலராமரிடத்தில் அபயமென்று விழ அதைக்கண்டு பலராமர் ஆதரித்து கெருடனைப்பார்த்து அவன் இருந்தால் சண்டை நேரிடுமென்றும் தம்பி போனவனைக் காணுமென்று கெருடபகவானைப் பார்த்து வாருமென்று சொல்ல கெருடன் கேட்டுக்கொண்டு போக பொழுதானது விடிந்துபோய்விட்டது தம்பியைக் காணுமென்று மயங்க அழுது அந்த மலையின்மேல் பெருமாளாக அவதரிக்க அப்பால் கிருஷ்ணமூர்த்தி பொழுது விடிந்ததைக் கண்டு வெங்கடேசப்பெருமாள் இருக்கிற போது நகரி தேசத்தை ஆளாநின்ற அப்துல்காதர் மகளானவள் பொழுது விடிந்து பதினைந்து நாழிகையாகிவிட்டபடியால் நாளுக்குநாள் பூசை செய்கிற வழக்கப்படி தாதிமார் புடைசூழ கொலுவுக்கு வருகிற விதங்காண்க.





நங்கை சொல் கவி

சித்திரப்பதுமைபோலும் சேயிழையானமாது
புத்தியிலுயர்வதாக புண்ணியவதியுமாகி
சுற்றிலும்மாதர்சூழ்ந்து தொழுதுமேசபையைநாடி
ரத்தினமயில்போல்மாது நங்கையும்வருகின்றாளே,

### நங்கை வருகிற தரு

சித்திரப்பதுமைபோலும் சேயிழையானமாது
புத்தியிலன்பாக மெத்தவேயோசித்து
பூசைசெய்யவேவந்தாள் வெகுரஞ்சிதமாது
பூசைசெய்யவே நடந்தாள்
பித்துகள்தான்கொண்டு பேய்பிடித்தவள்போல
பேதையாகவே மாதுசிரோன்மணி
சுரு. பெருமையுடனேயவள் அருமைமாதர்களுடன்
பெருமையதாகவே மருமம்பேசிய சித்

முத்துரவிக்கைதுன்ன மோகனமாலைகள்மின்ன
மொய்குழலாள்மாதுவந்தாள் கொலுவைநாடி
பக்தியாய்மார்பினில் முத்துசரங்களாட
பாதத்தின்தண்டைகள் தாளசப்தங்கள்போட
சுரு. மங்கைசிரோன்மணி தொங்கியகரமதில்
கங்கணவளையல்கள் கைதனில்வீச சித்

முல்லையரும்புபோல் பல்வரிசைகளாட
நல்லழுக்குத்தியுடன்வந்தாள் மிகவடிவினிலழகிய
மல்லிகைமலர்சூடி மங்கையருடன்கூடி
மாதுசிரோன்மணி வந்தாள்
சுரு. மத்தளதாளமும் துத்திகளூதிட
கைதாளவீணையும் மெத்தமுழங்கிட சித்

வயல்சூழ்மஞ்சநகர்தனில்வாழ்ந்து வன்னிகுலபால
அறியாதவடமலை என்னும்சீலன்
வைகுந்தவாசநாதன் மலரடியைத்துதித்து
செய்யும்கவிக்கிரங்கி சீஷனைகார்த்திடும்
சுரு. வண்மையாய்விட சாஸ்திரங்கண்டுமே
கண்ணன்பேரில் கவியாகச்செய்தனன் சித்

### வசனம்

அடிவாடி சகிமார்களே! எள்ளுக்குள் எண்ணெயைப் போல் எங்கும் நிறைந்திராநின்ற ஏகநாதனை கணணுக்கு நிறைந்த கணவர் வரவேண்டுமென்று கடவுளை துதித்து பூசைசெய்வோம் வாருங்களடி தாதிமார்களே.

### நங்கை சொல் கவி

வாருங்களம்மா தாதிமார்களே
மலையேறிபூசை செய்வோம்
வாருங்களடி வணங்கவெல்லாம்
பார்த்துபூசை செய்திடுவோம்

மல்லிகையிருவாக்ஷி மருக்கொழுந்துபாரிஜாதம்
முல்லையரும்பெடுத்து முகுந்துசரம்தான்கொடுத்து
நல்லஜலம்நீர்தெளித்து நன்ருகதரைமெழுகி
கல்லின்மேல்கோலமிட்டு கண்மூடிஜெபித்திடுவோம்
கயிலாசரைப்போல் கணவன்வரவேண்டுமென்று
ஒயிலாகபூசைசெய்து உண்மையுடன்தோத்தரித்து
நின்றிடவேளதிராக நிரூபமொன்றுளழுதிகட்டு

பொது வசனம்

இந்தப் பிரகாரமாக நங்கையானவள் பூசை செய்திருக்கும்போது தாதியானவள் நங்கையைப்பார்த்து ஏதென்று சொல்லுகிற விதங்காண்க.

தாதிகள் சொல் தரு

அம்மாபூசைமுடித்தேயம்மா போவோம்நமதுமனையம்மா பூ

நங்கை சொல் தரு

ஆசையுனக்கில்லை அரனைத்துதிப்போமடி ஆ

தாதிகள் சொல் தரு

இதுவேபயித்தியமா யின்னேரம்வேதம்படித்தாயம்மா இ

நங்கை சொல் தரு

மதிமயங்காதேவர்கூடி மகிழ்ந்திடதுதிப்பேன்போடி ம

பொது வசனம்

அகோதெப்படியென்ருல் நங்கையானவள் ஒரேஉறுதியாகப் பூசைசெய்து தாதிகளுடன் சம்வாதம் பேசிக்கொண்டு பூசைசெய்திருக்கும்போது வெங்கடேசப் பெருமாளாகயிராநின்ற கிருஷ்ணமூர்த்தி இவளின் உறுதியை அறியவேண்டுமென்று கோபாலராய் ஆடு மாடுகளை மேய்த்து வருகிறவிதங் காண்க.

இடையன் வருகிற தரு

டேயலாரோ டையோ டேயோ
டேயலாரோ டையோ டேயோ

அண்ணமாரே தம்பிமாறே அடுக்காய்வாருங்கள்
இவளிருக்கிற முடுக்கைப்பாருங்கள்

கன்றுகளைஒன்ருய்கூட்டுங்கள் காக்கும்பசுசீலைநாட்டுங்கள்
பெண்ணுளை நான் கண்டுவருகிறேன் அவளைபின தடர்தாலும்



வசனம்

இவ்விதமாக வெங்கடேசப் பெருமாளா யிராநின்ற கிருஷ்ணமூர்த்தி இடையனைப்போல் ரூபங்கொண்டு மாடுகளைக்காட்டில் ஓட்டிக்கொண்டு மலையின்மீது வருகிறபோது நங்கையானவள் இடையனைப் பார்த்து பரிகாசம் செய்கிற விதங்காண்க.

நங்கை சொல் தரு

தாதியரேயொன்றாய் சேருங்கள்
இவன் தவடையிலேரெண்டு போடுங்கள்
சேதியறியாமல் வந்தவன் இவனை
தட்டுபட்டென்றுமே போடுங்கள் தா

சூதுசெய்யவந்தபாவியை இவனை
துரத்தியடிப்போம் வாருங்கள் சூது

இடையன் சொல் தரு

வாலிபமானஎன்கண்ணே வந்திடுவாயெந்தன்பின்னே
பாலுகள்காய்ந்திடும்பெண்ணே பார்வதியாளுடஅண்ணன்
வேலைகளில்லையோடி வீட்டில்வந்தாலே
பாலுதயிர்வெண்ணெ பசியாறவுண்ணலாம்
பக்ஷமாய்வாடி எந்தன்மீதிலே
இஷ்டமாய் நாடி
கஷ்டமில்லாமல் கன்னியிருக்கலாம் வா.

நங்கை சொல் தரு

காட்டுக்கொடிகளைபிடுங்கி இவனை
காலையுங்கையையும் கட்டடி

பூட்டுத்தலையாக மாட்டுங்கடி
புரட்டிவிரட்டியிவனை உருட்டுங்கடி

தாதிகள் சொல் தரு

கூடிப்பிடிப்போம்நாம்வாரும் அம்மா இவனை
குறுக்கேமரித்திடுவீர் நீரும்
ஓடிப்போகுமுன்னேவாரும் இவனை
உயிர்வதைசெய்தாலே தீரும் கூடி

இடையன் சொல் தரு

இவளழகை என்னசொல்வேன் இவள்மனதை எப்படிவெல்வேன்
பவழவாய்திறந்து பலுக்குவாய் பாவிமதன்கணையைவிலக்குவாய்

மாமன்மகளைப்போல் மருவியேயிருக்கலாம்
தாமதமில்லாமல் சந்தோஷமாகவே
தயவாகவாடிஎன்மீதில் நயமாகத்தேடி
தாடகைபோலவேநீ தடுத்துநீபேசாதே
ஏடாகூடமாகயிங்கே எதிர்த்துநீபேசாதடி இ

நங்கை சொல் தரு

கானகத்துஇடைப்பயலே இவனை
கசக்கிப்பிழியலாம் கையாலே
ஆணவங்கொண்டு வந்தவனையிப்போ
கோலுங்கம்பளியும் பிடுங்கடி
குடுமையைப்பற்றி யிழுங்கடி
பாலுபல்லாவை யுடையுங்கடி
பஞ்சாய்பறக்கவே அடியுங்கடி

பொது வசனம்

இவ்விதமாக கோபாலனுயிருந்த இடையனைப் பிடித்து துரத்த அவர் மாய்கையாக ஓடிட நங்கையானவள் யாரோ ஒரு இடையன் வந்து தன்னுடைய பதிவிரதாதனத்தைக் குலைக்க வந்தானென்று துக்கித்து புலம்புகிற விதங்காண்க.

நங்கை புலம்பல் தரு

எந்தன்மீதில் என்னகோபமோ ஓ வைகுந்தவாசா
ஈடழிக்க தாபமாகுமே

உந்தனைக்காண உண்மையானேனே ஓ வைகுந்தவாசா
ஓடிவந்து காரும்தேவனே

மே ஓ வைகுந்தவாசா
அழும்பானவார்த்தை சொன்னனே

என்செய்வேன் ஏதுசெய்வேன் ஓ வைகுந்தவாசா
இந்தவேளை வந்துகாருமே எந்தன்

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக சுவாமியை நினைத்து அழுதுகொண்டிருக்கும்போது வெங்கடேசப் பெருமாளாக இருக்கப்பட்ட கிருஷ்ணமூர்த்தி சோதிக்கிற விதங்காண்க.

வெங்கடேசப் பெருமாள் சொல் விருத்தம்

ப த்திசைமுனிவரெல்லாம் எந்தனை துதிக்கக்கண்டேன்
கர்த்தனுமெழுந்திருந்து களிப்புடன்பணிகள்பூண்டு
உத்தமியிவளுமென்ன உண்மையாயிருக்கக்கண்டு
கர்த்தரும்காக்ஷிதர கருத்துடன்வருகின்றாரே.

வெங்கடேசப் பெருமாள் வருகிற தரு

துஷடர்களையடக்கி சிஷ்டைகள்தான்புரியும்
திருவேங்கடராயர் வந்தார் கொலுசம்பிரமமாக
திருவேங்கடராயர் வந்தார்
மச்சவதாரமாக மாயன்சோமுகனைபிடித்து
லச்சையுடன்பிளந்து எறிந்துவிண்டு
பிரமதேவனை யடித்தேன்
அவன்வேதம் நான்கையுங்கொடுத்தேன்
சுரு. பெற்றுக்கொண்டுமே வைத்துக்கொள்ளவு
பத்தியாகவே சித்தமகிழ்ந்து து

மாபலிசக்கிரவர்த்தி மதத்தையடக்கிவைத்தேன்
மாயமாகவே சென்றேன்
அந்தணராயாசகம்கேட்டேன் மூன்றடியிடம்
வாமனரூபமாகி வாழ்நகரையடைந்தேன்
வதைத்திடப்பட்டேன்மனங் கொதித்திடக்கண்டேன்
சுரு தாடியே அவனுயிர் சாடியே
நமனுக்குபோட்டியாகவே கூட்டியனுப்பினேன் து

தூணில்நரசிங்கமாக தொடுத்தேன்அவதார
துஷ்டன் இரணியனை தூக்கியேமகிழ்ந்தேன்
அவனுயிரைப்போக்கியே மடித்தேன்
சானூரன்பிரகலாதன் சஞ்சலங்களைத்தீர்த்தேன்
சாதகமாகவெகு போதனையாக
சுரு. சாஸ்திரவேதமும் சகலமும்தெரிய
சூஸ்திரமாகவே சுருக்குடன்போதித்தேன் து

)க்கதிபன் ஏகசக்ராதிபனுப்
ஏடுத்தேனவதாரம்பெருமாளாக தொடுத்தேன்துளசிமாலை

வாழும்மன்னவர்வந்து கரங்குவிக்க
வந்தனம்புரியஅவர் நினைத்ததனையறிய

சுரு வாதனையாகவே போதனைசெய்தேன்
சேதிகளறிந்திடும் சீதரனை து

பாலன்வடமலை பாடினகவிதன்னை
பார்த்துமனங் களித்தேன்
சந்தோஷமாகவே போற்றிவரமளித்தேன்

சுரு. சாலைநகர்வாழ்கிருஷ்ண சுவாமியுநானறிந்து
சற்குணசீலன் வெகுநற்குணபாலன்
சந்தேகமொன்றுமில்லை என்றுரைத்தேன்
வாகனமொன்று வைகுந்தரைத்துதித்தேன் து

வெங்கடேசப்பெருமாள் சொல் கந்தார்த்தம்

அண்டமெலாமோரடியா யளந்தமாயன்
அலைகடலில்பள்ளிகொள்ளும் அமர்ந்ததேவன்
தொண்டர்களைகாக்குமொரு வண்ணன்கண்ணன்
துஷ்டர்களைமதமடக்கும் தேவகண்ணன்
குண்டலங்கள்செவியிலாட குலுங்கியோட
கூடியிருந்தவண்டினியும் குழலாளாட
எண்டிசையும்பார்க்கவேதான் சங்குசக்கரமேந்தி
எழிலானபெருமாளும் வருகின்றாரே.





வெங்கடேசப் பெருமாள் தரு

வாராரேமாயவரும் பெண்ணைத்தேடிமலைமீதில்
நேராயோடி வாராரே
பாராயோஎந்தன்முகம் பச்சைத்திருமேனியனே
கூராரினதுமொழி நேராய்வரமளிப்பேன்
திருப்பதிமலையில்வாழும் திருவேங்கிடதாசன்
மறைபொருளாகவந்த மாயகிருஷ்ணதேவரோடி வா

வசனம்

வாரும் பெண்களா! நீங்க ளெந்தவூர் எந்த தேசம் இங்கே வந்து அழவேண்டிய காரணமென்ன அதைச்சொல் லுங்கடி பெண்களா.

நங்கை சொல் தரு

இவர்தாண்டிஎந்தன்நாயகர் ஆ சகிமாரே
இவர்தாண்டிஎந்தன்நாயகர்
எவருமறியயென்னை இட்டுமணம்புரிந்து
ஏகபோகமாக யிருப்பாரடியம்மா
மையலதுகொண்டேனே ஆ சகிமார்களே
மையலதுகொண்டேனே
மையலதுநான்கொண்டு தையலர்களைக்கொண்டு
மருவியொருமுத்தம் தருவாரோவருவாரோ இவ

வெங்கடேசப் பெருமாள் வருகிற தரு

பேசும்மொழிதன்னைகண்டுபிரியம்வைத்தாய்மனதுகொண்டு
ஆசையாகஎன்னைக்கண்டு அணையுமென்றாய்மனதுகொண்டு
தாசியாளேஎன்னைவந்து தழுவுமென்றாய்மனதுகொண்டு
கூச்சமுனக்கில்லையோடி கூறுமென்றால்வருவானேடி

நங்கை சொல் தரு

காணவென்றால்எந்தனுக்கு கண்கள்மிகவும்கூசுதே
கதம்பம்பன்னீருவாடை கழிக்கவேவீசுதே
பாணமும்என்மேல்பாயுது பாய்ந்துஉன்மேல்தாவுது
காமன்கணைபொறுப்பேனே காயத்தைவைத்திருப்பேனே

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

துலுக்கர்குலப்பெண்களைநான் எடுக்கவும்ஞாயமோ
தொட்டுயிழுத்தால்பழிபாவம் என்னைச்சேருமே
அடுக்குமோஎன்குலமவிணையிருக்க ஆசையாகவந்திருக்க
வாய்மொழிகளும்போமோ வையகத்தில்பழிப்பாகுமே

நங்கை சொல் தரு

காசியிலுள்ளமன்னவரோ கயிலாசவாசகரோ
தேசத்திலுள்ளதொரு தெய்வலோகத்தரசரோ
ஆசையும்விஸ்வாசமோ அதிகமனங்கூச்சமோ
நேசம்என்மீதிலில்லையோ நீயெதுவோசொல்வாய்

பொது வசனம்

இந்தப் பிரகாரமாக சுவாமியானவர் மனம் சோதிக்க நங்கையானவள் நான் செய்த தபத்தால் கயிலாசநாதரைப் போல கண்ணுக்கு நிறைந்த கணவனுகவு மிருக்கக்கண்டு ஒரே யுறுதியாக சேர வாருமென்று சொல்ல சுவாமியான வர் தடுததுச் சொல்ல. நங்கையானவள் இந்த உயிரை விட்டு விடுகிறேனென்று சொல்லி மோகங்கொண்டு கோபத்கால் விழுந்து கிடப்பதைக்கண்டு சுவாமியானவர் நங்கையைப் பார்த்து சொல்லுகிறவிதங் காண்க.

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

நங்கையேயென்முகம் பாராய் நன்ருய்
ஒருகண்ணுல் நேராய்
பொங்கியகோபத்தால் போவென்றுதடுத்தேனே
அங்கங்குளிரவேதான் சிங்காரமாய்வாரும் போ

மையலதுகொண்டு தையலரைக்கண்டு
மருகநினைவது கொண்டேன்
மையலதுகொண்டு தையலரைக்கண்டு
மருவியொருமுத்தந் தருவாளோ மை

பொற்கொடிமாதேநீவாரும் புணர்ந்துமேயாசையைதீரும்
கற்பனைக்காரியென்று அப்பவேயறியேனே
அற்புதமாகவே சொற்படிநடப்பேன் நங்

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக சுவாமியானவர் தேத்திமாத்தி தித்திப்பை யூட்டுவதுபோல சொல்லி நடக்க அவர் பின்னுலே துலுக்கப்பெண் போவதைக் கண்டு தாதியானவள் பயந்து அரசனிடம் சொல்ல வரும்போது நகரி தேசத்தை யாளாநின்ற அப்துல்காதர் சாயபு கொலுவுக்கு வருகிற விதங் காண்க.

அப்துல்காதர் வருகிற விருத்தம்

கொட்டியேமேளசத்தம் குவலயம்நடுநடுங்க
கட்டியும்விருதுகூறி களிப்புடன்மனதுதேறி
அட்டியில்லாமல்மந்திரி அனைவரும்சூழ்ந்துநிற்க
வட்டில்லா வரசுசெய்ய மன்னனும்வருகின்ருனே.





அப்துல்காதர் வருகிற தரு

நடுங்கவேகுடிகளும் நகரிதேசத்தையாளும்
நல்லஅப்துல்காதர் வந்தானே
நடுங்கவேகுடிகளை உதைத்துவதைத்திட
அடங்காதபேர்களை அடித்துமடித்திட நடுங்

இடிகொம்புடங்கா பேரிகையடித்திட
எக்காளபேரிகை பூரிகையூதிட
வக்கணைவாத்தியம் வகையுடநூதிட
கொட்டிமுழக்குடன் நட்டுவர்பாடிட
முன்பாகமாதர்கள் தொந்தமாயாடிட
அட்டியில்லாமந்திரிமார் அருகினில்சூழ்ந்திட நடுங்

அப்துல்காதர் தேச விசாரணை கவி

அல்லிமான் ஜல்லிமான் அப்துல் ரகிமான்
அவரவர்கள் கொலுவினில் வந்தனர்களோ
ஷேக்மகமது செயலாவுத்தர்
சேனைத்தலைவர்களும் வந்தனர்களோ
டொப்பி அங்கியும் ஜோடுகள் மாட்டியே
துரைத்தனத்தாரும் வந்தனர்களோ
இடையில் கச்சையும் இறுக்கியேகட்டிடும்
எஜமான் ஷேக்மகம்மது வந்தனர்களா
துப்பாக்கிதூக்கி தோளில் வைத்து
தபாலென்றுசுடும் நவாப்புகள்வந்தனர்களா
மாப்சுல்தான் மதார்சாயபு
மண்டலீகர்களும் வந்தனர்களா

பொது வசனம்

அரசன் கொலுவாக இருக்கும்போது துலுக்கப் பெண்ணுக்கு சுவாமியானவர் வழிகாட்டி வனத்தைத் தாண்டி நடக்கிற விதங்காண்க.

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

மங்கையேயென் கூட வாரும்
மலையெல்லாம் நீ சுற்றி பாரும்
எங்கள்வீடுயிது தாண்டி
ஏகிநடந்திடுவோம் வாடி
தங்கும்கோபுரமிது தாண்டி
தயவாகநடந்திடு தூண்டி
இந்தமலைகளைத் துடர்ந்தோம்
அந்தமாய்தையல்களாடி விளையாடி
சொந்தமாய்மையலுடன் ஜோடியாய்சேருவோம் மங்

பொது வசனம்

இவ்விதமாக வெங்கடேசப் பெருமாளாகப்பட்டவர் துலுக்கப் பெண்ணுடனே நந்தவனம் போய் நந்தவனத்தின் வேடிக்கையைக் காண்பித்து போகும்போது அந்தச் சமயத்தில் தாதியானவள் அரசனிடம் சொல்லுகிற விதங் காண்க.

தாதிகள் சொல் வசனம்

கேளுமரசரே! உன் மகளானவள் பூசை செய்திருக்கும் போது ஆரோ ஒரு புருஷன் வந்து பெண்ணே கண்ணே யென்று சொல்லி அழைத்துக்கொண்டு போகிறானையா சுவாமி.

அப்துல்காதர் சொல் தரு

எங்கேயிருக்கிறான் பாருங்களவனை
ஏகிப்பிடிப்போம்நாம் வாருங்கள்
பொங்கும்சோறுபோல் வாருங்களவனை
பிடித்துவடிப்போம்நாம் சேருங்கள் எங்

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

வருகிறவன்யென்ன செய்வானோ
வந்துமேநம்மையென்ன வைவானோ
ஹரிஹரியென்று துதித்தேனே
ஆதிமூலமென்று மதித்தேனே வரு

நங்கை சொல் தரு

வந்தால்வரட்டுமே பார்ப்போம்
வாய்மொழிதன்னையே கேட்போம்

சிந்தைகலங்கியே வாடாதேமன்னு
சிதறியேயுன்மன மோடாதே வந்

நொடிக்குள்ளேயெகிரியே பிடிப்போம்
நோகவேயவன்மனம் மடிப்போம்
துடிக்கவேயவனை யடிப்போம்
துஷ்டப்பயலைநாம் கெடுப்போம் நொ

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

சண்டாளியுன்னுலே கெட்டேனே
சாமர்த்தியமெல்லாம் விட்டேனே
மண்டையுடைப்பான்போல தோணுதே
மதிமயக்கமிக காணுதே சண்

நங்கை சொல் தரு

கதறியேயோடாதே மன்னவாநீயும்
கலங்கிதவிக்காதே முன்னேவா
அதிரநடந்து ஓடாதேமன்னு
அஞ்சியேநீமனம் வாடாதேமன்னு கத

அப்துல்காதர் சொல் தரு

கண்டுமேகோபத்தால் மண்டையுடைப்பேனென்று
கட்டியடித்தானே

துண்டாகவெட்டுவேன் சண்டாளப்பயலென்று
கத்தியைப்பிடித்தானே

மண்ணுலும்வேந்தனிட பெண்ணைக்கொண்டு
மடையனேயென்றுசொல்லி

குண்ணவேயெந்தன்நெஞ்சம் கொண்டுவந்தபாவியென்று
கோபமாகவேகுத்தினுன்

பண்ணியேதவத்துக்கு பதிவிரதையைக்குலைக்க
பாசக்கயிற்ருல் கட்டியிழுத்தானே

எண்ணியவிதிப்பயன் இதுவோவுனக்கென்று
ஏங்கித்தவித்திட பழித்தானே

வெங்கடேசப் பெருமாள் சொல் விருத்தம்

உருக்கியதங்கந்தன்னை வூற்றியபதுமையான
மோகினியின்மோகத்தாலே திருடனென்றென்னைப்பிடித்து
முறுக்கியகயிற்றினுலே முன்பின்னுயிறுக்கக்கட்டி
நறுக்கியேபிழிந்துயென்னை நசுக்கிறுரென்னசெய்வேன்





## வெங்கடேசப் பெருமாள் புலம்பல் தரு

ஐயோ இதென்னவிதியோ யென்னை
அடித்துநீயும்பிடித்து அனியாயம்செய்யவும்
வைகுந்தவாசராலே வந்தகூதோயிது

சுரு. வாட்டியேயெந்தனை சாட்டியடிக்குறீர்
மேட்டிமையாகவே கேட்டுக்கொள்வீரே ஐ

உண்மையெதுவோநம்புவீர் என்னைகட்டிநீயும்திட்டு
ஓடவேமிரட்டுறீர் உண்மை
அண்ணன் தம்பியெனக்கு ஆருமில்லையோ

சுரு. ஆசையால்வந்துமே மோசம்தானுனேன்
பேசவுமென்மனம் கூசுதேயென் செய்வேன் ஐ

கோபமில்லாமல் கேளுமேநீயும்
குறித்துஎன்னை மரித்தகுற்றம் பொருத்துவைத்துமேயாளும்
ஆபத்தைக்காக்கின்ற ஆதிமூலமும்செய்தகூதோ

சுரு. அஞ்சியேநானுமே கெஞ்சியேகேட்டிட
வஞ்சகமில்லாமல் நெஞ்சினில்நாட்டியே ஐ

## வெங்கடேசப் பெருமாள் சொல் விருத்தம்

குறித்துமேயென்னைநீரும் கோபத்தால்கேட்பீரையா
உரைத்திடபுத்திசொன்னேன் உணராமல்யென்னைநீங்கள்

துரத்தியேயடிக்குறீரே துன்மார்க்கர்வந்துயென்னை
மரித்துமேஞாயங்கேட்க மன்னரைகாண்கிலேனே.

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

ஆண்டவனேயென்று ஆரோவொருபெண்ணானவள்
அழுகுரல்கேட்டனையோ துஷ்டர்களே
தாண்டியேநானுமப்போ தனியாய்வனங்கடந்து
தாராளமாகிப்போனேன் துஷ்டர்களே
வேண்டியேமோகத்தால் விரும்பியேவந்தென்னை
விடமாட்டேனென்றுசொன்னாள் துஷ்டர்களே
தூண்டிலகப்பட்டு துடிக்கின்றமீனைப்போல
தூஷணித்துவந்தனையோ துஷ்டர்களே

அப்துல்காதர் சொல் தரு

எந்தன்பலத்தையுங்காட்டி இழுத்துவதைக்குறேன்வாட்டியே
சிந்தைகலங்கவைக்குறேன் தூக்கியேமண்வெட்டிபுதைக்கிறேன்

வெங்கடேசப் பெருமாள் விருத்தம்

மூடருக்குபுத்திசொன்னால் நம்பமாட்டார் [மாட்டார்
முழிகாட்டும்பெண்களுக்கு புத்திசொன்னால்கேட்க
நாடறியும்வேசியுட பசப்புப்போமோ
நலமுடனேபொருள்பறிக்கும் நடத்தையாகும்
வீணருக்குபுத்திசொன்னால் கேட்கமாட்டார்
வெள்ளெலிபிடித்திடவே விளையாட்டென்பார்
கூடவேயிவர்களுக்கு புத்திசொன்னேன்
கூட்டுவேன்சொல்லை நிலைநாட்டுவீரே.

அப்துல்காதர் சொல்தரு

புத்திசொல்லவந்தமூடனே யிடித்துத்தள்ளும்குடிகேடனே
சற்றுமஞ்சாமலேயெடுத்தானே யெந்தன்
சமர்த்தன்மகளையும்கெடுத்தானே புத்தி

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

எந்தன்பின்தொடர்ந்து யேகிவரக்கண்டே
இடரொன்றும்செய்யவில்லை துஷ்டர்களே
எந்தன்மனமறிய உண்மையாகச்சொன்னேன்
உடம்பெல்லாம்நோகுதையோ துஷ்டர்களே
தந்தைதாயாரென்னை தழுவினதிரேகமெல்லாம்
தணல்போலெரியுதையோ துஷ்டர்களே

சந்தனம்புனுகுடன் ஜவ்வாதணிந்ததிரேகம்
தளும்புதேதிரேகங்கள் துஷ்டர்களே

அப்துல்காதர் சொல் தரு

கிட்டிகோலெடுத்துமே மாட்டுங்கள் யிவனை
கிளப்பாமலேதள்ளி யுருட்டுங்கள்
எட்டிநடவென்று வாட்டுங்கள் யிவனை
இழுத்துயென்முன்பாக நெட்டுங்கள்

வெங்கடேசப் பெருமாள் சொல் விருத்தம்

என்னிடசம்பந்தத்தால் இருந்ததோராஸ்திமூன்றில்
உந்தனுக்குமூன்றிலொன்று உண்மையாய்தருவேனிப்போ
சொந்தமாய்வாங்கிக்கொண்டு சுருக்கினில்நீங்களிப்போ
அந்தமாய்தேசஞ்சென்று அரசதுசெய்திடீரே.

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக சுவாமியிடத்தில் மூன்றிலொரு பங்கு ரொக்கம் பெற்றுக்கொண்டு போனபிறகு சுவாமியானவர் தங்கையாகிய காளிகாதேவியை நினைக்க காளியம் மனும் பிரசன்னமாகிறவிதங் காண்க.



காளிகாதேவி சொல் விருத்தம்

கண்டவர்கலங்கிட காலனும்நடுநடுங்க
துண்டர்கள்பயந்துவாட துடுக்குடன்சூலமேந்தி
சண்டசர்முண்டிபூதம் சகலரும்புடைகள்சூழ
மண்டலந்தன்னில்தேவி மாகாளிவருகின்றாளே.

காளிகாதேவி வருகிற தரு

பராசக்திகாளியிதோவந்தாள் படையுடனே
பேய்பூதம்யிடைவிடாமல்சூழ
ஆரமோகனமாலையாட அண்டத்திலதேவர்களும்கண்டுபயந்தோட
தீரமாகவேவீரங்கூறிய சிங்கவாகன மீதிலேறிய பரா

வேலுசூலங்கையில்தாங்கிடவே யிருபுரமும்
வேதநாத கீதம்பாடவே
காதிதண்டமுமிவன் சூலம்கைப்பிடி
உலகெலாம்புகழ்படைத்த நீலி
ஓதுமாமறைவேதம் பாடும்சூலி
அந்தணர்வேதம் கூறிடும்பாவி
அதிவீரசூரர்கள் கண்டுமேவாடிட பரா

சோதிடமாமணிமகுடம் துன்னிடவேமார்பிலணிந்த
மீதிரத்தினமாலே துன்னிடவே
காதிலோடியகம்மல் தொங்கிடவே
கழுத்தில்சரப்பளி மாலேமின்னிடவே
அண்ணன்பாதம் அறியவேண்டியே
அதிகதுருசாய்காரிய மறியவேண்டியே பரா

காளிகாதேவி சொல் வசனம்

சரணம் சரணம் அண்ணுவே! என்னே யழைப்பித்த காரணம் திருவுளம் அருள வேண்டு மண்ணுவே.

பொது வசனம்

அகோ வாருமம்மா தங்கையே! இந்த பெண்ணினுலே நான் பட்ட துன்பம் போதும்; இவள் தந்தையானவன் என்னே யடித்து அனியாயஞ் செய்தான்; நீயும் அதிசீக்கிர் மாகச் சென்று மலேயடி வாரத்தில் நின்றுகொண்டு உரட்டி மிரட்டி பயத்தைக் காட்டி வாரும் என் தங்கையே.

காளிகாதேவி சொல் தரு

துடுக்குடன் தானெழுந்தாள் காளிகாதேவி
சூதாகத்தானடந்தாள்
அடிக்கடிவாங்குவேன் அண்ணன்மகிழ
அஞ்சாதபயல்களே நெஞ்சைப்பிளந்திட துடு

வந்துமேகுதித்தாள் மனங்கலங்கி
நொந்துமே பதைத்தாள்
என்னேக்கண்டுமே எல்லோரும்துதித்திட
நொந்துமேமலேயடி வாரத்திலிருந்திட வந்

அப்துல்காதர் சொல் தரு

சந்தோஷமாகவேநடப்போம் இந்த
சதிரானமலேயெல்லாம் நாமுமேகாப்போம்
வந்தவழிகளேப் பாரும்
வழிகின்றவள் யாருமேகூறும் சந்

5

காளிகாதேவி சொல் தரு

கூறுமென்றுசொன்னபோதே கொக்கரித்தெழுந்துகாளி
பாருங்களென்றுசொல்லி பதைக்கவேவதைப்பேனே

காளிகாதேவி சொல் தரு

காவல்தப்பிபோனதாரடா அடாதுஷ்டா
கள்ளனேநீயெந்த ஊரடா
ஆவலாகபோனசேதி அறியயெனக்குச்சொல்லும்
ஆட்டியேவுங்களை வாட்டியேவிடுவேன் காவல்
முழிக்காதேதிருடா எதிரில்வந்து
முகத்தைப்பாரடா திருடா
பழிக்குப்பழிவாங்க பார்த்தானேயின்னேரம்
ஒழுங்காய்ச்சொன்னலாச்சு உன்னைநான்விடமாட்டேன் கா

அப்துல்காதர் சொல் தரு

எந்தன்மகளை யெடுத்துவந்தவன்தன்னை
ஏங்கியேபார்த்துவந்தேன் நீலியரே
வந்தவழியிலேதான் வளைத்துக்கொண்டேனையும்
கண்டுநடுங்கிவாடி காரிழைவிட்டுவாடி
கூடியடிக்கலாமோ நீலியரே எந்

காளிகாதேவி நொண்டிச் சிந்து

பூதங்களா நீங்கள் வாருங்கள் பிடித்துத் தின்னவே பாருங்கள் காதகபயல்களை இப்போ கடித்துத்தின்னவே வாருங்கள், ஓடிவருகுமா மொருபூதம், இவர்களை ஓங்கியடிக்குமா மொருபூதம் இவர்களை தாங்கியடிக்குமா மொருபூதம், ஆடிவருகுமாம் சிலகணங்கள், துறுக்கரை அடித்துபிடிக்குமாம் பலகணங்கள், வாயைத்திறக்குமாம் சிலபேய்கள், அப்போ வந்து கடிக்குமாம் பலபேய்கள், ஓங்கி யடிக்குமாம் வேதாளம், ஓடியொளிவாராம் பாதாளம், கூடி யடிப்பாளாங் காளியருமப்போ கொண்டாட்டங் கொள்வாளாம் காளியரும்.

அப்துல்காதர் சொல் விருத்தம்

அடித்திடவேபேய்பூதம் அலறியேயெழுந்திருந்து
அடித்துமேமனமும்வாடி சுவாமியைமனதிலெண்ணி
தொடுததோர்பொருளையெல்லாம் கொடுக்கிறேன்பேர்பாதிக்தான்
தடுத்துமேநீசொல்லாமற்றுன் தயவுடன்வாங்கிக்கொள்வீர்.

வசனம்

வாருமம்மா காளிகாதேவி! சுவாமியென் றறியாமல் செய்த குற்றத்தாலும் காவலைத் தப்பிப் போனதாலும்

மனம்பொறுக்க வேண்டும்; இந்தப் பொருளில் பேர்பாதி தருகிறேன் தடை சொல்லாமல் வாங்கிக்கொள்ளுமம்மா தாயே காளிகாதேவி.

பொது வசனம்

இவ்விதமாக சுவாமியிடத்தில் பெற்று பெற்று வந்த பொருள்களில் பேர்பாதி பகர்ந்து காளிகாதேவிக்கு தந்து போன பிறகு சுவாமியைப் பார்த்து நங்கை சொல்லுகிற விதங்காண்க.

நங்கை சொல் வசனம்

அகோவாரும் பிராணபதியே! இருவருங்கூடி கலந்திருப் போம் வாரும் பிராணநாயகா.

வெங்கடேசப் பெருமாள் சொல் விருத்தம்

நோம்பியகலஅரிசி நொடிதனில்சமைப்பவள்போல்
வீம்புகள்பேசவேண்டாம் வேசியப்புறமேபோடி
பாம்பின்வாய்த்தேரைப்போலபதைத்துநானிருக்கும்போது
சோம்பேரிதனமாய்நீயும் சிரித்துநீயிருந்திடாயே.

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

சுத்தப்பைத்தியக்காரி சொல்லுவாயேநின்னைமீறி
சற்றும்பொறுக்காமல் பெற்றதந்தையென்னை
சாடடியகோபத்தால் வாட்டியடிக்கும்போது
சாட்டியேகண்ணைநீ மூட்டியேவிட்டாய்சண்டை சுத்

நங்கை சொல் தரு

பத்தினிதவமது போச்சேயிந்த
பாவத்துக்குள்ளாக லாச்சே
புத்தியுமக்கில்லையோ ஒத்துநாமிருக்கவும்
பெண்பாவம்பெணதோஷம் பின்னால்தொடர்ந்துவரும்
பெருமையெந்தனை அருமையாய்சேர்ந்திடும் பத்

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

உருட்டியேகண்ணைக்காட்டியேமன்னன் உறுதியறிந்தாயேசீமாட்டி
பிரட்டியேவார்த்தைகள் பேசாதேநீபோடி
திருட்டுத்தனமாக சீராய்குலுங்காதே
முரட்டுத்தனங்கொண்டு முன்னேபலுககாதே உரு

நங்கை சொல் தரு

மூட்டியேவந்தென்னைபேசி முடுக்காதேயுந்தன்கையைவீசி
உருட்டியேகண்காட்டி திருட்டுத்தனமாக

ஊருக்குப்போவோம்நாம் வாருமென் றழைத்திட்டாயே
உத்தேசித்துப்பாரு சத்தியமாய்சொன்னேன் முட்

வெங்கடேச்ப் பெருமாள் சொல் சீசபத்தியம்

காதலாயெந்தனை கலந்துயிருக்கவும்
கன்னியல்ல போடிபோடி

நங்கை சொல் சீசபத்தியம்

பாதகனுமே பதைத்துமேவாடிட
பாவிநீவந்தாயே மோடிசெய்ய

வெங்கடேசப் பெருமாள் சொல் சீசபத்தியம்

ஓதுவேனெந்தனுடன் உண்மையா யிருந்திட
உத்தமிநீயல்ல போடிபோடி

நங்கை சொல் சீசபத்தியம்

போதமாகவே பிரிந்திடயெந்தனை
பிரியமாய்வந்தாயே யிந்தமோடி

வெங்கடேசப் பெருமாள் சொல் சுலோகம்

வாதுகள்செய்ய வந்தாயோபோடி

நங்கை சொல் சுலோகம்

காதலாய்வந்தேன் கன்னியடா

வெங்கடேசப் பெருமாள் சொல் சுலோகம்

சேதிகளறிவேன் திருடிபோடி

நங்கை சொல் சுலோகம்

மாதுதான்வந்தேன் மருகவேகூடி

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

இன்னமுமுனக் கென்னுயிருக்குது
இட்டுவந்ததோஷத்தாலே பந்தமிருக்குது

நங்கை சொல் தரு

கண்ணைக்காட்டியழைத்துவந்த கசடனேவாரும்
கண்டபடியேசிடுவேன் முறடனேவாரும்

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

கப்பல்பணம்சிலவழிக்கும் கண்ணுளனேடி
கண்ணைகாட்டிபேசவந்தாய் எந்தனைவேண்டி

நங்கை சொல் தரு

தப்படிக்கும்தாதனைப்போல் தட்டிப்பேசாதே
தாராளமாயிங்குவந்து யிட்டுப்பேசாதே

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

மானயீனமில்லாமலே மறித்துபேசுராய்
மாளிகையில்வாரேனென்று குறித்துப்பேசுராய்

நங்கை*சொல் தரு

ஈனமானமில்லேயோதான் எத்துக்காரனே
எனக்குவழிசொல்லிப்போவாய் சித்துக்காரனே

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

காசும்பணம்பரிக்குங்கள்ள சிரிக்கியேபோடி
கைகாட்டிபேசவந்தாய் மூரிக்கியேபோடி

நங்கை சொல் தரு

ஊசிவிற்குங்குறவனைப்போல் உள்ளம்வாடியே
உற்றுஉற்றுப்பார்க்கவந்தாய் என்னைத்தேடியே

நங்கை சொல் விருத்தம்

தேடிவந்தென்னை தீங்குகள்நினைத்தபாவி
கூடியேயிருந்தாலாச்சு குற்றங்கள்செய்வாயானல்
நாடியேபெண்கள்பார்த்து நகைக்கவேயுன்னையிப்போ
வாடிடச்செய்வேன்நானும் மடிபிடித்திழுப்பேன்பாராய்

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக சுவாமியை துலுக்கப் பெண்ணனவள் பிடித்திழுக்கும்போது அந்தச் சமயத்தில் மாயவன் இன்னம் மனஞ் சோதிக்க வேண்டுமென்று தன் பெண் சாதியைக் காட்டி கூட்டிவரும்படியாய் நினைத்தபோது அனுமாரானவர் அந்தரங்கமாய் வருகிறவிதங் காண்க.

அனுமார் சொல் விருத்தம்

அண்டமும்நடுங்கிவாட ஆகாயதேவரோட
துண்டமும்கலங்கிவாட சூழ்பேய்பூதமோட
குண்டலம்செவியிலாட குலுங்கவேபணிகள்பூண்டு
ண்டிசைபுகழ ஆஞ்ச னேயரும்வருகின்றாரே

அனுமார் வருகிற தரு

வந்தானேயனுமந்தசூரன் வானுலகத்திலே
எதிரில்லாவீரன்
இந்திராதி தேவர்களாட
எத்திசைரிஷிமுனிவர் கத்திப்றந்தோட
கடகங்கணங்களாட கண்டுமேபேய்பூதங்களாட
அஞ்சனதேவி யீன்றபாலன்
ஆதிமூலத்துக் கனுகூலன்

அனுமார் சொல் ஜம்பை

பச்சைத்திருமேனியனே பாதமதில்யான்சரணம்
உச்சிதமாயென்னையழைத்த உற்றசேதிசொல்வீர்
மங்கைமணவாளசுவாமி மால்கிருஷ்ணபெருமாளே
சங்கதிசொல்லவேண்டும் சுவாமிபெருமாளே.

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக சுவாமியானவர் நயன பாஷையால் அலமேலு மங்கையை அழைத்து வரும்படி சொல்ல அனுமா ரானவர் தூது போகிற விதங்காண்க.

அனுமார் சொல் கந்தார்த்தம்

கருகியேமுகங்கள்வாடி கயிலாயமதனைத்தேடி
குருவிபோல்பறந்தேயோடி கொக்கரித்தட்டிமீறி
மருவிவிளையாடநீரும் மங்கையைக்கொண்டுவந்தே
சரியான ரூபங்கொண்டு. [னென்று

அனுமார் சொல் தரு

தாண்டியேவைத்தார் காலைதூக்கி
வேண்டியேவைத்தார்
ஆண்டவர்சொற்படி அம்மனையழைத்திட
ஆதிகயிலாயம்வந்து அருகினிலவந்திட
சேர்திக்கயிலாயம்வந்து சிவன்பாதம்கண்டிட
துரிதமாயனுமந்தன் சுருக்கினில்வந்திட

பொது வசனம்

இவ்விதமாக அனுமாரானவர் அலமேலு மங்கையை அழைத்து வரும்படி கைலாயம் வருகிறபோது முக்கண் படைத்த சிவபெருமான் கொலுவுக்கு வருகிற விதங்காண்க.



பரமேஸ்வரர் சொல் விருத்தம்

பார்வதிதனக்குகந்த பாசமாயீசன்தானும்
நேர்பணியலங்சரித்து நேரமாய்ப்போகுதென்று
மீறியுந்தானெழுந்து விண்ணவர்பணிந்துநிற்க
காரிமையீசன்தானும் கனகசபைவருகின்றூரே.

பரமசிவன் வருகிற தரு

கைலாசநாதரிதோவந்தார் சபையைத்தேடி
கைலாசநாதர்வந்தார் ஒயிலால்நடைநடந்து
காதில்குண்டலமாட கையில்தண்டிகையேந்தி கை

மயிலைப்போல்நடனமாட மன்னவர்கள்வந்துதேட
குயிலைப்போல்ராகம்பாட கொஞ்சியேமாதர்களாட
சடைமுடிதான்துலங்க சரப்பளிமேல்விளங்க கை

இடையினில்பணிதுலங்க யிருபுரமும்தான்துலங்க
ஒருமனதாகவே உண்மையுடனிருப்போர்க்கு
பரமனென்றுதுதிப்போர்க்கு படியளக்கும்கர்த்தனே கை

அனுமார் சொல் வசனம்

சரணம் சரணமையா கர்த்தனே! உமது மைத்துனராகிய வெங்கடேசப்பெருமாளானவர் அலமேலுமங்கையை அதிக சீக்கிரமாக அழைத்துவரச் சொன்னுரையா பரமேஸ்வரரே.

ஈஸ்வரர் சொல் வசனம்

அடாவாடா சீஷர்களே! நமது தங்கையாகிய அலமேலுமங்கையை அதிசீக்கிரமாக அழைத்து வாருங்கள் சீஷர்களே.



## அலமேலு மங்கை வருகிற விருத்தம்

வாசனைமலர்கள்சூடி வந்திட்டசபையைநாடி
பூசியகதம்பவாடை புனுகுசவ்வாதணிந்து
கூடியேகண்கள்ரெண்டும் கொதித்திடும்சூரியன்போல்
மாசிலாமலரோன்காண மங்கையும்வருகின்றாளே.

## அலமேலு மங்கை வருகிற தரு

அஞ்சுகம்போலவே ரஞ்சிதமானமங்கை
அலமேலுமங்கைவந்தாள் மிகவடிவினிலழகிய
கொஞ்சிநடைநடந்து கோதையருடன்துடர்ந்து

சுரு. குங்குமம்களபமும் நங்கைமேல்வீசிட
கங்கணவளையல்கள் கைதனில்ஜொலித்திட அஞ்

பச்சைவயிரமணி பதக்கம்பளபளென்ன
பாதசரங்கள்துன்னவே காலிலிட்டபாதசரங்கள்
அச்சுதன்தேவியென்று அறிந்துமனங்களிக்க

சுரு அஞ்சியேவனிதையர் வஞ்சியர்கூட
மிஞ்சியேகவரிகள் கொஞ்சியேயோடிட அஞ்

முத்துரவிக்கையுமாட்டி முறித்துமேகண்கள்வாட்டி
சற்றுமஞ்சாமல் சபைதனில்கைகள்நீட்டி
உத்தமியிவளென்று சித்தங்களிக்கநாட்டி

சுரு. உன்னதமாதர்கள் கன்னியர்கண்டிட
என்னையழைத்தவர் தன்னையேவேண்டிட அஞ்

மாசிலாமயிலைப்போல் பூசிகளபம்வீச
கேசவனடிபாதம் காணவேமிகநாட
காசியுருமாலை கண்டசரங்களாட

சரு. கண்ணுளர்தேவியும் எண்ணியவிதமாய்
அண்ணனழைத்திட புண்ணிழமிதுவென்று அஞ்

அலமேலுமங்கை சொல் தரு

சரணஞ்சரணமண்ணு சடைமுடிக்கேசரணம்
திருமூவர்புகழ்கின்ற தேவதேவாசரணம்
கொண்டல்வண்ணனதேவியரை கூட்டிவரச்சொன்னதென்ன
எண்டிசையோர்தானறிய யெந்தனுக்குமுரைப்பீர் சர

அலமேலுமங்கை சொல் வசனம்

சரணஞ் சரணமண்ணுவே! என்னை யழைப்பித்த காரிய மின்னதென்று திருவுளம்பற்றி யருளவேணு மண்ணுவே.

பரமேஸ்வரர் சொல் தரு

அத்தான்உனைத்தேடி அழைக்கமனதழைக்க
அன்புடன் மனம்வாடி
பெற்றுமேவாச்சுது புறப்பட்டனுமந்தன்
உற்றசேதியது உண்மையாகச்சொன்னேன் அத்

அலமேலுமங்கை சொல் தரு

என்றைக்கிருந்தாலும் இன்றுதாய்வீடு
இதுசதமாகுமோ என்னண்ணு
பண்ணியதாலி பார்த்துகட்டினேர்முகம்
பாராமலிருந்தோர்க்கு தீராதவிசனமேசேரும் என்

பரமேஸ்வரர் சொல் தரு

என்னுடனேநீபிறந்தாய் என்தங்கை
இன்பமாய்நீவாழி அலமேலுமங்கை
பொன்பொருளெல்லாம் பூஷணம்நான்தந்தேன்
புத்தியாய்நீவாழ்குவாய் அலமேலுமங்கை என்

அலமேலுமங்கை சொல் தரு

சடைமுடிதான்தரித்து சதுராய்எதிராய்வந்து
சந்தோஷமாய்த்தருவாய் அண்ணுவேநீரும்
கெடிபெற்றநாளுமே கீர்த்தியாய்வாழ்வதற்கு
யடிதரங்குறையாமல் அடியாட்கருள்செய்வீர் சடை

அலமேலுமங்கை சொல் வசனம்

அகோ கேளும் எனது அண்ணுவே! என் மனதில் ஓர் கருத்திருக்கின்றது அது என்னவென்றால் தாம் வீட்டிலிருந்து சீதனமாக வரிசை பெற்றுக்கொண்டு போனதேயாகில் அதில் ஏதாவது ஒரு பொருள் குறைந்ததேயானல் ஓர் காலங்களில் கோபமான வேளையில் ஏளிதமாகச் சொல்லிக் காட்டுவார். அப்படி வராமற்படிக்கு நெருப்பும் நீரும் தவிர மற்ற யாவற்றுமான பொருள்களெல்லாம் பெற்றுக் கொண்டு போய் சந்தோஷமாய் வாழ்ந்திருக்க வேண்டுமென்று எண்ணி யிருக்கிறேன். நீ அவ்விதமாகச் சந்தோஷமாய் தாரும் எனது அண்ணுவே.

பரமேஸ்வரர் சொல் தரு

வயிரம்புஷ்பராகம் வைத்துயிழைத்திட்ட
வங்கிதோடாயிது என் தங்கை

அலமேலுமங்கை சொல் தரு

இவர்மாட்டிராக்கடி மருவுசொருகுகம்மல்
மாக்ஷிமையாய்தாரும் என்னண்ணு

பரமேஸ்வரர் சொல் தரு

கொத்துசரப்பளி கோர்வையுருமாலை
குணமாகத்தந்தேனே என் தங்கா

அலமேலுமங்கை சொல் தரு

சித்தங்களித்துமே சிறப்பாகவைத்திட்ட
சீரானபெட்டிதாரும் என்னண்ணு

பரமேஸ்வரர் சொல் தரு

காப்புகொலுசுடன் கண்டசரமாலை
கண்டுகொள்வாயென் தங்காய்

அலமேலுமங்கை சொல் தரு

மாப்பிள்ளையும்நானும் மகிழ்ச்சியாய்குந்திட
மணையொன்றுநீர்தாரும் யென்னண்ணு

பரமேஸ்வரர் சொல் தரு

காசிபுட்டாசேலை கனத்துஆரமாலை
கண்டுகொள்வாயெந்தன் தங்காய்

அலமேலுமங்கை சொல் தரு

நாசியில்பதித்திட நல்லமூக்குத்தியொன்று
நலமாகநீர்தாரும் யென்னண்ணே

பரமேஸ்வரர் சொல் தரு

வாசனைமலர்கள்சூட்டி வைத்திராக்கடி
வகையுடன்தந்தேன் யென்தங்காய்

அலமேலுமங்கை சொல் தரு

கூசிடகண்களும் கொடுத்தநகைகளும்
குவலயம்புகழ்வார்க ளென்னண்ணே

பரமேஸ்வரர் சொல் தரு

கூடத்தில்வைத்திட குடவிளக்குதந்தேன்
குறிப்பாகயிதைபாரும் யென்தங்காய்

அலமேலுமங்கை சொல் தரு

மாடத்தில்வைத்திட மணிவிளக்குவொன்று
மாயவர்மகிழ்ந்திட யென்னண்ணே

பரமேஸ்வரர் சொல் தரு

சொந்தமாகநீயும் சொன்னபொருளெல்லாம்
சுறுக்காகத்தந்தேனே யென்தங்காய்

அலமேலுமங்கை சொல் தரு

எந்தன்மாளிகைதனில் குந்தியேபால்காய்ச்ச
நாற்காலியொன்றுதாரும் யென்னண்ணே

பரமேஸ்வரர் சொல் தரு

தப்பிதமில்லாமல் செப்புகுடங்கள்தட்டு
தாம்பாளந்தந்தேனே யென்தங்காய்

அலமேலுமங்கை சொல் தரு

ஓப்பியேநானுமே உண்மையாகப்பெற்றேன்
ஊருக்குப்போய்வாரேன் யென்னண்ணேவே

அலமேலுமங்கை சொல் கவி

குண்ணுமல்யெந்தனுக்கு கொடுத்திட்டவரிசைபெற்றேன்

பரமேஸ்வரர் சொல் கவி

கண்ணாளனுடனேகூடி களிப்புடன் வாழ்ந்திடாயே

அலமேலுமங்கை சொல் தரு

போய்வாரேன்போய்வாரேன் எனது அண்ணு
புண்ணியனூர்மாளிகைக்கு போய்வாரேனண்ணு

பரமேஸ்வரர் சொல் தரு

போய்வாரும்போய்வாரும் யென் தங்காய்
புத்தியுடள்நீயும்வாழ்வாயே யெனது தங்காய்

அனுமார் சொல் தரு

திடுக்கென தானெழுந்து துரிதமாயோடிவந்து
துடுக்குடன் புரவிநான்கை துரிதமாய்ரதத்தில்கட்டி
அடுக்காகரதத்தின்மீதில் அலர்மேலுமங்கையேற
சடுக்கென ரதத்தைத்தூண்டி சுவாமிமுன்வருகின்ருரே.

அனுமார் சொல் தரு

நாகமணிதேரைநடத்தி அனுமந்தன்
பாகவதனுகதிருத்தியே பாட்டைவழிதனில்நடத்தியே

அலமேலுமங்கை சொல் தரு

ஆந்தையும்கோட்டானும் அலரியோடுது
ஆகாதசகுனங்கொண்டு மனதுவாடுது
வீச்சுளிகட்டியே வீரிட்டுவோடுது
போரவழியிலென்ன பொல்லாங்குநேருமோ
எண்ணியஎண்ணத்தில் யெங்கும்போராகுமோ
எனது அண்ணன்கீர்த்தி யெங்கும்பேராகுமோ

அனுமார் சொல் கவி

அஞ்சாதேயென்றுசொல்லி அம்மனேதேற்றியே
அடிக்கடிபுரவியைத்தூண்டியே ஆறுமலேகளேத்தாண்டியே.

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக அலமேலுமங்கையை அனுமாரான வர் அழைத்து வருகின்றபோது அந்தச்சமயத்தில் சுவாமி யானவரை பிடித்து இழுப்பதைக்கண்டு என் பெண்ஜாதி வருகிருளென்று சொல்ல நங்கையானவள் சுவாமியுடன் வாதாடுகிற விதங்காண்க.




நங்கைக்கும் சுவாமிக்கும் தர்க்கம்

சுவாமி சொல் தரு

கொண்டமனைவியர்க்கும் ரெண்டகம்நினைக்கொணுது
கோதையேயிது வாதை கொண்ட

நங்கை சொல் தரு

அண்டையில்வந்திருக்க ஆசையானவள்நானிருக்க
ஆகாதோமனம் நோகாதோ அண்டை

சுவாமி சொல் தரு

அடுக்குமோநீசொல்லும் வார்த்தைஎல்லாம்பெண்ணே
அடுக்காதே குடிகெடுக்காதே அடுக்கு

நங்கை சொல் தரு

மூடுக்கானவார்த்தைபேசி மோசம்செய்யவேண்டாம்
கொடுக்காதே வார்த்தை தடுக்காதே மூடு

சுவாமி சொல் தரு

பாவமென்றுபாராமல் தேவியாள்வந்தென்னை
ஏசுவாள் வாயாலே பேசுவாள் பாவ

நங்கை சொல் தரு

கோபமாகவந்துதன் குமரியாளும்கைபிடிக்க
கொடுப்பேனே நான்கையா லடிப்பேனே கோப

சுவாமி சொல் தரு

கண்டவளைக்கைபிடித்து கொண்டவளைவிட்டுவிட
கொள்ளுமோ மனந்தள்ளுமோ கண்ட

நங்கை சொல் தரு

கண்ணுக்குநிறைந்ததொரு பெண்ணாகநானிருக்க
காட்டுநீர் மிரட்டியோட்டுநீர் கண்ணு

சுவாமி சொல் தரு

சக்களத்திவந்தாளென்று பக்குவமாயுன்னைக்கண்டு
கொட்டுவாள்வாயால்திட்டுவாள் சக்க

நங்கை சொல் அகவல்

என்னசொன்னாலும் இனிமேல்கேட்பேன்
கன்னிகழியாப்பெண்ணை கைக்கொள்ளவந்து
என்னவார்த்தைகள் ஓட்டியேசொன்னாய்
பண்ணியேதடைசெய்ய படுபாவிநியாயமோ
ஒப்பியேஎந்தனை உண்மையாய்சேரும்
தப்பிதமில்லாமல் தயவுடன்வாரும்

நங்கை சொல் தரு

அரண்மனைக்குள்ளேநீர்வாரும் நீர்வாரும்
ஆசைதீர்க்கவேகண்ணால் நீபாரும்

சுவாமி சொல் தரு

வாராளேயிதோஎன்தேவி எந்தன்தேவி
வாவென்றழையாதேஎன்னைக்கூவி என்னைக்கூவி

நங்கை சொல் தரு

சந்தோஷமாய்சொன்னவார்த்தை போச்சேபோச்சே
தனியாய்நிற்கவிதியாச்சே யாச்சே

சுவாமி சொல் தரு

மாருவித்தைகள்பேசி என்னையேசி
மயக்கவந்தாயே கைவீசி

நங்கை சொல் தரு

தந்திரமாகவந்துமுன்னே வந்துமுன்னே
தயவானவார்த்தைகள் சொன்னேன்சொன்னேன்

நங்கை சொல் தரு

மரியாதையாயென் கூடவாரும் நீரேபின்வாரும்
மருவியணைத்தால்சுகம்போதும் போதும்

சுவாமி சொல் தரு

தெரியாமல்யென் சொல்லைக்கேட்டு
தேம்பியழலானுய்விதிகெட்டு விதிகெட்டு

சுவாமி சொல் கொச்சகம்

கோமளமாதேயெந்தன் கொஞ்சுங்கிளிரஞ்சிதமே
காமன்கணையாலே களைத்துமிகவாடவேண்டாம்
ஜாமமதுநான்குக்கும் சதிருடனேயிருவருமாய்
மாமன்மகளைப்போல மருவியேயிருந்திடுவோம்.

சுவாமி சொல் வசனம்

கேளும் பெண்ணே நங்காய்! மன்மதன்கணையால் வாட வேண்டாம் ஜாமம் நான்கு போகுமுன்னே என் பெண் ஜாதிக்கு ஒரு தந்திரம் செய்துவிட்டு வருகிறேன் பாரும் நங்காய்.

சுவாமி சொல் கந்தார்த்தம்

கோரியஎண்ணம்போல குறைவிலாமுடிக்கயெண்ணி
சாரியாயண்ணன்கையில் சகலமும்பெற்றுக்கொண்டு
சீருடனேபணிகள்வாங்க சிந்தையில்மகிழ்ச்சியாகி
பாரியரதத்தில்வைத்து சுவாமியும்வருகின்ருரே.

சுவாமி சொல் தரு

பாக்கியமேபாக்கியம் எனதுதேவி
சிலாக்கியமே சிலாக்கியம்
பாக்கியமே பலபொருள்பெற்றுவாராள்
போக்கிரித்தனமாகவே பொருளிலொன்றுமறைத்தேன்
வாக்கைக்கொடுத்துமே வரிசையைக்கொடுத்தேன்-பாக்

பொது வசனம்

இவ்விதமாக அலமேலுமங்கை கொண்டுவருகிற வரிசையில் சுவாமியானவர் குறைக்க அந்தச் சமயத்தில் அனுமார் சொல்லுகிற விதங்காண்க.

அனுமார் சொல் தரு

பாரியசவுக்கெடுத்தான் அனுமந்தர்கையினில்
பம்பரம்போலவே சுழட்டியடித்தான்
நேராகபுரவிகள் நில்லாமலோடிட
நெடுமுடிகொடிகளும் வேருடன்சாய்ந்திட-பாரி

ஆந்தையும்கோட்டானும் அலறியோட
அலமேலுமங்கையும் கண்டுமேவாட
பார்த்துமேபக்ஷிகள் பயந்துமேவாட
பாயும்புலிகள் கண்டுமேவாட-பாரி

அலமேலுமங்கை சொல் விருத்தம்

அண்ணாநீளந்தனுக்கு அளித்திட்டவரிசைபெற்றேன்
கண்ணாளர்பார்த்துபார்த்து கலங்கவேயேசுவாரே
என்னாளும்நானும்பேய்போல் பின்னுகதவித்திடாமல்
ஒண்ணாகிலும்குறைவு யில்லாமல்சொல்லுவாயே.

வசனம்

வாரும் அனுமந்த பாலகா! நான் கொண்டுபோகின்ற வரிசையில் ஒரு பொருளாகிலும் குறையில்லாமலிருக்கிறதா என்நாளைக்கும் ஒரு சொல்லாக சொல்லுவார்; ஆனபோதிலும் இப்போது வந்த வரிசையில் ஒவ்வொன்ருக சோதித்துப் பார்த்துச் சொல்லும்

அனுமார் சொல் தரு

பத்துவிரல்நிறைந்த பவுத்திரமோதிரம்
நத்துமூக்குத்தியுடன் வந்திருக்கக்கண்டேன்

அலமேலுமங்கை சொல் தரு

கங்கணகடகமும் கைக்கேற்றவளையலும்
மங்கைநான்சொன்னதுபோல் மகிழ்ந்துபாருமே

அனுமார் சொல் தரு

கண்டசரமாலைகள் கழுத்திலிடுமாரங்கள்
தண்டையுடன்வந்திருக்க சதுராய்கண்டேனே

அலமேலுமங்கை சொல் தரு

கொண்டைக்குப்பிராக்கடி குலுங்கியிடும்பணிகளும்
எண்டிசைமதித்திடவே யிருக்குதாபாரும்

அனுமார் சொல் தரு

மயிர்மாட்டிஜிம்புலும் மருவிடும்கம்மலும்
வைரத்தாலிழைத்துவைத் திருக்கக்கண்டேன்

அலமேலுமங்கை சொல் தரு

காலாழிபீலாழி காலிலிடும்பாதரசம்
நாலாவிதத்தினுசுகளும் நன்ருய்பாருமே

அனுமார் சொல் தரு

பொறுப்புடனேயுமதண்ணன் மகிழ்ந்துவளித்ததில்
கரிப்பிலே கண்டுகொண்டேனம்மணி

அலமேலுமங்கை சொல் கவி

விருப்பமாய்மனதிலெண்ணி வீட்டையான்விட்டுப்போக
பொறுப்புடன்வரிசைதந்து போவென்றாரெனதுஅண்ணன்
கரிப்பிலேயில்லேஎன்று கலங்கியேயழுதுவாடி
திருப்பதிபோகாமற்றான் திரும்பியேநடக்கின்றாளே.

வசனம்

வாரும் அனுமந்த பாலகா! தாயற்றபோதே பெண் திக்கற்றதென்பார். அதுபோல் எனது அண்ணன் செய்த சதியை ஏதோ கபடம் வைத்துக்கொண்டு தாய்வீட்டிலிருக்கவொட்டாமலும் உண்மையா யவன் வரிசை கொடுப்பதைப் போல் கரிவேப்பிலேயில்லாமல் வரிசை வைத்திருக்கக் கண்டேன் இந்த விடத்தில்தானே காவலாயிரும் நான் அதிக துரிதமாய்ச் சென்று கரிவேப்பிலே வாங்கிக்கொண்டு வருகிறேன் அனுமந்த பாலகா.

அலமேலுமங்கை சொல் தரு

கூறியசாபமது குறுக்கப்போக ஓ அண்ணா அண்ணா
குணமில்லாசகுனங்கண்டுநானும்வாரேன்

கணவரும்நானுமாக கலந்திருக்கவே ஓ அண்ணாஅண்ணா
கண்ணால்பார்க்க கருத்தில்லேயோ

கூடப்பிறந்த தங்கையானுமே ஓ அண்ணாஅண்ணா
குண்ணியேமனம் வாடலாகுமோ

காடுமலே ஆறுதாண்டியே ஓ அண்ணா அண்ணா
காலுநோக கலங்கிவாரேனே

பொது வசனம்

இவ்விதமாக அலமேலு மங்கையானவள் அழுதுகொண்டு போக அந்தச் சமயத்தில் பொழுது விடிந்துவிட அதைக்கண்டு அலமேலுமங்கை நடுவழியில் நின்றுவிட அந்தச் சமயத்தில் நங்கையானவள் சுவாமியைப்பார்த்து சொல்லுகிற விதங்காண்க.

நங்கை சொல் வசனம்

வாரும் என் பிராணநாதா! இருவரும் பள்ளியறைசேர்ந்து கூடி விளையாடுவோம் வாரும் என் பிராணநாயகா.

### வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

ஏழையடிநானுனக்கு எந்தன்மீதில்கோபம்வேண்டாம்
வாழைப்பழம்நானளித்தேன் வாங்கிப்பொசித்திடுவாய்
வெண்பொங்கல்புளியோரை வேணதும்தந்தேன்யானும்
கண்மணிவாங்கிநீயும் கண்டுபொசித்திடுவாய்
மாம்பழம்பிலாக்கனியும் மற்றதெல்லாம்நீபொசித்தாய்
தாம்பூலம்நானளித்தேன் தயவாய்தரித்துக்கொள்ளும்

### பொது வசனம்

இவ்விதமாக சுவாமியும் நங்கையும் பஞ்சணையில் இருக்கும்போது நான்கு ஜாமமும்சென்று பொழுதானதுவிடிந்த பொழுது அதைக்கண்டபோதே சுவாமியானவர் தன்னுடைய மாய்கை தெரியும்படி ஆனந்த சந்தோஷங்கொண்டு ஆசையாய் நகைத்தபோது அந்தச் சமயத்தில் மார்பில் வைத்திராநின்ற மகாலட்சுமி வெளியில் வந்து பார்க்கும் போது நங்கையைக் கண்டு சொல்லுகிறவிதங் காண்க.



### மங்கை சொல் தரு தர்க்கம்

மாளிகையில்பேசவந்த மட்டிசிரிக்கி அடிமட்டிசிரிக்கி
மன்னரைகெடுக்கவந்த கெட்டசிரிக்கி அடிகெட்டசிரிக்கி

நங்கை சொல் தரு

காளியைப்போல்வந்தாயடி காதகக்காரி அடிகாதகக்காரி
கண்டபடிபேசிடுவோம் வாதுகள்கூறிவாதுகள்கூறி

மங்கை சொல் தரு

சண்டைபோடவந்தாயடி சதிகாரப்பாவிஅடிசதிகாரப்பாவி
சுவாமிஎன்றுபாரேனடி மரியாதையடி மரியாதையடி

நங்கை சொல் தரு

கொண்டையைப்பிடிப்பேன் பேசாதேவாடிபேசாதேவாடி
கூடவந்தஞாயமென்ன சொல்லடிசூதாசொல்லடிசூதா

சுவாமி சொல் தரு [ண்ணே

யாருக்கென்றுசொல்லுவேன்நான் ஆதித்தன்கண்ணே ஆதித்தன்க
ஆத்திரப்படாதேபோடி கோபித்தன்கண்ணேகோபித்தன்கண்ணே

மங்கை சொல் தரு

தாசிபோடியுந்தன்குலம் தளுக்காய்பேசாதேதளுக்காய்பேசாதே
தாராளமாயிங்குவந்து நானும்சீறியேநானும்சீறியே

நங்கை சொல் தரு

கூச்சமுனக்கில்லையோடிகோபக்காரியேஅடிகோபக்காரியே
கூந்தலைப்பிடித்தடிப்பேன் நானும்சீரியேநானும்சீரியே

மங்கை சொல் தரு

வம்பாகபேசவந்தால் வாயாடிபோடிவாயாடிபோடி
வந்துஞாயம்சொல்லவந்தாய் நீயுமேபோடிநீயுமேபோடி

நங்கை சொல் தரு

சும்மாபேசவந்தாய் நில்லும்நில்லடிஅடிநில்லும்நில்லடி
சோரம்செய்யவந்தவழி சொல்லிநில்லடிஅடிசொல்லிநில்லடி

சுவாமி சொல் தரு

அடித்துப்பேசாதே நங்காநங்கையேஅடிநங்காநங்கையே
அழுதழுதுபேசாதடி மங்காமங்கையேஅடிமங்காமங்கையே

மங்கை சொல் தரு

முட்டிமுட்டிபேசவந்தாய் முரிக்கிமுரிக்கியேஅடிமுரிக்கிமுரிக்கியே
முணமுணென்றுபேசவந்தாய் கொழுததசிரிக்கியே அடி
கொழுத்தசிரிக்கியே

நங்கை சொல் தரு

எட்டிஎட்டிபேசாதடி எதிர்த்துபேசாதேஅடிஎதிர்த்துபேசாதே
எளிதமாய்கண்டபடிகுறித்துபேசாதே அடிகுறித்துபேசாதே

மங்கை சொல் சீசபத்தியம்

பெண்ஜாதிநானுமே பிரியமாய்வந்திருக்க
பேய்போலபுரளவேவந்தாயோடி போடிபோடி

நங்கை சொல் சீசபத்தியம்

உண்ணவேசாதம் உணவரிந்தபாக்கு
முன்னேமண்ணள்ளிபோடவந்த மலடிமலடி

மங்கை சொல் சீசபத்தியம்

கண்ணுசாடைகாட்டி கணவனைமயக்கியே
கைகலக்கவந்தாயோடி கழுதைநீபோடி

நங்கை சொல் சீசபத்தியம்

கன்னியேயிருவரும் கணவன்கேளிக்கையை
கண்டுகந்தாய் போடிபோடி

மங்கை சொல் தரு

இப்படிசொல்லாதேயிடிப்பேன்நான் போடிபோடி

நங்கை சொல் தரு

அப்படிசொல்லினுல்அடிப்பேன் போடிபோடி

மங்கை சொல் தரு

ஒப்பியேஎன்னுடன்உத்தமாநீர் வாரும்வாரும்

நங்கை சொல் தரு

கைபிடியாய்ப்பிடித்தேன்கணவனேநீர் வாரும்வாரும்

வெங்கடேசப் பெருமாள் சொல் தரு

கூடியேமாதர்வந்து குறித்தென்னைமதித்திடாமல்
நாடியேகைப்பிடித்து நங்கையேசெய்கைப்பார்த்தாய்
கூடுமோர்மயில்மீதேறும் ஆண்டவன்முருகனைப்போல்
வாடியேதவிக்கநானும் வந்ததேவிதிஎன்செய்வேன்.

பொது வசனம்

இந்தப் பிரகாரமாக சுவாமியைப் பிடித்து இழுக்கும் போது அவர் மனங்கலங்கி அழுது இருக்கும்போது மங்கை

லட்சுமியும் நங்கை லட்சுமியும் பயந்து சுவாமியென்று அறியும்படிக்கு கடூரமாகிய கோபத்தை காட்டி சொல்லுகிற விதங்காண்க.

சுவாமி சொல் கந்தார்த்தம்

கதிர்முடிகலகலென்ன கண்களில்பொரிபறக்க
துதியாதபேர்களில்லை சுவர்லோகமண்டலத்திலென்னை
மதியாதயிவர்சண்டை மானபங்கங்கள்செய்தார்

சுவாமி சொல் வசனம்

எடுத்திடுவேன் இருமனதையும் கொடுத்திடுவேன்
ஏங்கிதவிக்கவேங்கியேநானும் எடுத்திடுவேன்
அடித்திடுவேன் மங்கையால்
கண்டுமேமனதில் வந்திடச்செய்வேன்
நங்கையாள்கண்டுமே நடுங்கியொடுங்கிடச்செய்வேன்
நாராயணாகோவிந்தாவென்று நாடிதுதிக்கவந்திடுவேன்

சுவாமி சொல் விருத்தம்

ஏக்கமாயெந்தன்மீதில் இருந்திடும்பெண்ணேகேளாய்
தாய்கிழவிபோலேயெந்தன் தலைவாசல்தனிலேநின்று
சீக்கிரமாகயேகி சிறந்தபட்டாடைபூண்டு
பாக்குவெற்றிலைமடிக்கும் பணிப்பெண்ணாயிருந்திடாயே.

வசனம்

கேளும் பெண்ணே நங்காய்! நீ நம்மை நோக்கி தவம் புரிந்தபடியால் உன் மனதின்படியே தரிசனந் தந்தேன் எப்போதும் என்னிட பாதத்திலிருந்து அனுதினம் துதித்துக்கொண்டு பணிப் பெண்ணாயிரும் பெண்ணே நங்காய்.

நங்கை சொல் கந்தார்த்தம்

தேக்குமந்தாரை சண்பகம்
கொன்றையுடன் அருமலர்புஷ்பமேந்தி
பாங்குடனேபன்னீரால் அபிஷேகமாட்டி
பாதமதையான்துலக்கப் பணிந்துநின்றேன்
நான்குவிதப்பட்டாடை பாதமதுதுவட்டி
நல்லமலர்சாற்றியே நமஸ்கரித்து

நங்கை சொல் தரு

பாங்குடனேஎனைகாக்க தரிசனங்கொடுத்தீர்
எனக்காகசிந்தை நொந்தீர்
அரிகரியென்றும்மை அனுதினம்துதித்து
வரிசிலைவீரர்போல வந்துறவாட
வைகுந்தவாசகரே மலரடிசரணம்

## சுவாமி சொல் கந்தார்த்தம்

பத்தினியாள்நீயேஎன்று பக்ஷமாய்க்கேட்டோர்
கர்த்தனுமெழுந்திருந்து கடுகியேயோடிவந்து [தேன்
இத்தனைநேசமாயின் எண்ணத்தில்நினைவைப்பார்த்
தித்தியெனவேபேரி திருப்பதிநகரிலேதான்

## வெங்கடேசப் பெருமாள் சொல்

தரிசனங்கொடுத்தேன் எனதுவரிசையுங்கைகொடுத்தேன்
அரசனைப்போல்வந்து புருஷனைக்கட்டி
அண்டையில்நிறுத்தியே பெண்டாளைப்போல்கார்த்தேன்

## வாழி அகவல்

இத்தோர்சரித்திரம் இன்பமாய்க்கேட்டோர்
பார்த்தோர்வாசித்தோர் பலநாளும்
ஆல்போல்தழைத்து அருகுபோல்வேரூடி
மூங்கில்போல்தழைத்து மூசியாமல்வாழ்க
காலுதலைநோகாமல் கண்ணுறுவாராமல்
காத்திடவேண்டும் கடவுளேசரணம்.

## மங்களம் தரு

அடியுங்கள் ஜெயபேரிகை அச்சுதன்பேரில்
அன்பாய் மங்களம்பாடி அடி

கெடிகெடியாகவே கீர்த்திப்பிரதாபமாய்
கேட்டிடசத்தம் நாட்டிலுள்ளோர்காண அடி

டங்காபேரிகைசத்தம் எங்குமேகொட்டிட
சங்குசக்கரபாணி சரித்திரம்சொல்லிட
நாகசுரம்வீணை நாரிகள்ஊதிட
மேகமிரண்டோடி மேகத்தொனிகள்பாட அடி

நாககன்னிகள்வந்து நாட்டியமாடிட
நாரதர்வந்துமே வீணைகள்மீட்டிட,
தேவர்களும்நின்று திருநடனமாட
மேவி அலமேலு மங்கைசிரித்தாட அடி

பூதகிமுலைப்பாலை பிடித்துமேயுண்டிட
புண்ணியசரித்திரம் பூமியெங்குமதிர
மங்கைலட்சுமியையு மனதில்நினைத்தாட
மாயோனேயுன்பாதம் நானும்மதித்திட அடி

அச்சுதாவைகுந்தா அரிகரிகோவிந்தா
பச்சைநீலவர்ணா பாதம்சரணமென்று

மச்சயகூர்மவ தாராவராகநரசிம்மா
வாமனரூபா மலரடிசரணமென்று அடி

திருப்பதிநகரெங்கும் ஜெயபேரிமுழங்கிட
தேவர்கூடிபுஷ்ப மாரிபோல்பொழிந்திட
தாசன்வடமலை சரித்திடமுரைத்திட
தேசத்திலுள்ளோர்கள் தேடித்துதித்திட அடி

அரம்பைஊர்வசிவந்து ஆலங்களேந்திட
அழகாம்திருஷ்டிகவளம் அன்புடன்கழித்திட
வெங்கடேசப்பெருமாள் நாடகமுற்றிட
வேண்டியதிருமகள் விலாசம்அச்சிட
அடியுங்கள்ஜெயபேரிகை அச்சுதன்பேரில்
அன்பாய்மங்களம்பாடி அடியுங்கள் அடி

வெங்கடேசப் பெருமாள் நாடகம்

முற்றிற்று.

திருமகள் விலாச அச்சகம், சென்னை-1, 1965.

# விநோதரசமஞ்சரி